# "THE PROBLEM OF CHILD-EDUCATION OR THE TRUE MAKING OF MAN."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever yon can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

" HITCH YOUR WAGON TO A STAR." " TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum.*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 21.] **1914**ஞு பிப்ரவரிமீ, பிரமாதீசஞு மாசிமீ [சஞ்சிகை **11.**

## The Problem of Child-Education or The True Making of Man.

LORD HARDINGE ON

"BENDING THE EDUCATIONAL SYSTEMS."

"I am not here to decry any efforts that are made to secure for youug men in their early days such qualifications as are necessary if they are to get a good start in life, though I do think it is one of the most difficult problems before India to-day so to adjust the general life of the country that suitable careers may be open to the multitude of young men who are anually turned out to find no occupation appropriate to their aspirations and qualifications, and so to bend its educational systems that the education given may be that best catculated to fit them for their various careers. This is a problem that besets us in England as well as in India. I do not know how far the difficulties of the problem have forced themselves upon your notice, but I believe......,and I know that the other question of the character and well-being of your students occupies a most prominent place in your attention......*The inculcation of ideals of social service* has been your practice for years and from all I can hear your labours have been attended with happiest results." — *Lord Hardinge's speech at St. john's College, Agra.*

THE INCULCATION OF IDEALS OF SOCIAL SERVICE.

"MY BRAVE BOYS,—Nothing else is necessary but these—*Love, Sincerity,* and *Patience.* What is life but growth, *i. e. Love.* Therefore all love is life, it is the only law of life; all selfishness is *death*; and this is true here or hereafter. It is life to do good, it is death not to do good to others. Ninety percent of human brutes you see are dead, *ghosts*; for, none lives, my boys, but who loves. Feel my children, feel, feelfor the poor, the ignorant, the down-trodden, feel till the heart stops and the brain reels and you think you will go mad, then pour the soul out at the feet of the Lord and then will come POWER and HELP, INDOMITABLE ENERGY. Struggle struggle was my motto last ten years. Struggle, still say I. When it was all dark I used to say, STRUGGLE; when light is breaking in I still say STRUGGLE. Be not afraid, my children. Look not up in that attitude of fear towards that infinite starry vault as if it will crush you. Wait, in a few hours more the whole of it will be under your feet. Wait, money does not pay nor learning. It is LOVE that pays, it is CHARACTER that cleaves its ways through adamantine walls of difficulties."—*Epistle of Swami Vivekananda*



விவேக சிந்தாமணி.

**The Montessori System.**

A WOMAN'S WORK IN EDUCATION.

"It was not long before she became convinced that the generel principle upon which ordinary primary education is based is that of repression of natural development and not encouragement."

"As Mr. Edmond Holmes(the Chief Inspector deputed to report to the Board of Education) has pointed out, every educational system is a compouud of two distinct though interpenetrating elements. The first of these we call its PRINCIPLE, the second its METHOD. In Mme. Montessori's system the relation between the two corresponds almost exactly with that between the doctrines of faith and works as presented to the early Christians in the Pauline Epistles."—*The Times*(*London*).

## மாண்டிஸ்ஸரி வித்யாதத்துவமும் முறையும்.

மேரியா மாண்டிஸ்ஸரி என்பவர் இத்தலி தேசத்திற்பிறந்தவர். ஏகபுத்திரியாதலால்,பெற்றோர்கள் அவரை செல்வமும் சீருமாய் வளர்த்து நன்றாகக் கல்வியும் போதித்து வந்தார்கள். டாக்டர் பரீக்ஷையில் தேறி ஒரு ஆஸ்பத்திரியில் வேலையாக அமர்ந்தார். அங்கே மனோபலமற்ற குழந்தைகளையும் மனப்பித்துப் பிடித்த குழந்தைகளையும் ஒன்றாக வைத்து நடத்தி வந்தார்கள். இது அவருடைய மனதை உருக்கிற்று. மனோபலமற்ற குழந்தைகளை அன்பு ஆதரவோடு நடத்தி அவர்களைத் தேற்றப்பார்த்தார். இப்படி இவரால் தேறின குழந்தைகள் பொதுப் பள்ளிக்கூடங்களுக்குச் சென்று படித்தபொழுது மற்றக்குழந்தைகளை விட மேலாகப் படித்துத் தேறினார்கள். இதிலிருந்து,குழந்தைகளைப் போதிக்கு முறையைச் சீர்திருத்த வேண்டு மென்று அதற்காகக் கங்கணம் கட்டிக்கொண்டு உழைக்கலானார்.

"செய்வன திருந்தச்செய்" என்னும் மூதுரை கற்றவராதலால், குழந்தைகளைப்போதிக்கு முறையைச் சீர்திருத்து முன் தன்னையே சீர்திருத்திக்கொள்ள முயன்று தமது வேலையை விட்டு விட்டு மறுபடியும் ஸர்வகலாசாலை புகுந்து படிக்கலானார். தத்துவ சாஸ்திரங்களை நன்றாகக் கற்று மனோதத்துவங்களையுள்ளபடி யுணர்ந்து கொண்டார். பிறகு பிரதம பாடசாலைகளைப் போய்ப்பார்த்து அங்கே சிறுவர்களுக்குப் போதிக்கும் முறையைக் கவனித்து வந்தார்.

இப்படி எல்லாப் பாடசாலைகளுக்கும்சென்று கவனித்து வந்ததில், குழந்தைகளுக்குப்போதிக்கும் முறை அவர்களுடைய இயற்கையறிவை விசாலிக்கச் செய்வதாயின்றி, அதை யடக்கிச் செயற்கைப் படிப்பு (அதாவது, 'பொட்டைப்பாடம்' என்று சொல்லும் ஏட்டுப் படிப்புச்,) சொல்லிக் கொடுத்து வருவதைக் கண்டார். இதனால் குழந்தைகளுடைய புத்தி மழுங்கி மந்தகதி யடைந்து வருவதைக்கண்டு அதை நிவர்த்திக்க முயன்றார். இந்த முயற்சி இவரைப்போல் பலர் முன் முயன்றுசெய்திருப்பினும் அது வெல்லாம் பலிக்கவில்லை யென்பதையு முணர்ந்தார்.

இதைப்பற்றிய சிந்தனை முதிர முதிர அந்த அம்மாள் தன்னுடைய நோக்கத்தைத் தானே நிறைவேற்ற வேண்டு மென்று யத்தனித்தார். அதற்கு ஏற்ற ஸமயம் வாய்த்தது. ஒரு கனவான் ஏழைகள் சிக்கனமாகக் குடித்தனம் செய்து வாழ்வதற் கேற்றதாய் தனியிடத்தில் நேர்த்தியான பக்காக் கட்டடங்கள் கட்டி அதை அவர்களுக்குக் கொடுத்து அங்கே யெல்லாரும் சிக்கனமாய் வாழ ஏற்பாடு செய்து வந்தார். ஏழைகள் குடும்பத்தில் குஞ்சு குழந்தைகள் அதிகம் இருப்பது வழக்கம் தானே. அதைப்பற்றி அவர் கவனிக்கவில்லை. ஆகவே ஏழைக் குடும்பங்களெல்லாம் ஒரு பக்கத்தில் சேர்ந்த பொழுது குழந்தைகளின் உபத்திர

வம் ஜாஸ்தியாயிற்று. இந்தக்குழந்தைகளைப் பழக்கும் வேலையை மான்டிஸ்ஸரி அம்மாள் ஒப்புக்கொண்டார். குழந்தைகளை அதட்டி யுருட்டி அதிகாரம் செய்து அவர்கள் மனம் நடுங்கச்செய்யாமல், அவர்கள் இயற்கையறிவு விசாலிக்கும் வழியைக் கவனித்து அந்தந்த வழியில் அவர்களுக்கு புத்தி விசாலித்து மனம் தேறும்படி செய்தார். இவர் செய்த சூக்ஷ்ம மெல்லாம் நாம் "ஆத்மவித்தை" யென்று சொல்வதில் அடங்கும். குழந்தைகளின் அறிவு (ஆத்மா) தானாக விசாலிக்கும் தன்மை வாய்ந்தது. இது மனித ஜன்மமெடுத்ததின் பாக்கியம். அப்படித்தானாய் விசாலிக்கும் அறிவை அடக்கியொடுக்கிமுடிக்காமல், சாதகசாதனமறிந்து நல்வழி காட்டி அன்பு, ஆதரவு என்கிற இரண்டினாலேயே குழந்தைகளை வசியப்படுத்தி அவர்களும் தம் மனதை வசப்படுத்திக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்யலாம் என்பது ஆதிகாலம் தொட்டு ஏற்பட்டு "குருகுலவாசம்" என்கிற ஸம்பிரதாயத்தில் இங்கு நன்றாய் ஸ்திரம் பெற்றிருக்கிறது. இந்த உண்மையை ஸாத்தியமென்று காட்டினதற்காக இந்த அம்மையின் பேர் இப்பொழுது ஜகப்பிரஸித்தியடைந்திருக்கிறது. இதைப்பற்றி லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் ஒருவர் விஸ்தாரமாயெழுதியிருக்கிறார். இவ்வித முயற்சி இந்தியாவில் ஹரித்வாரத்திலும், கல்கத்தாவுக் கருகில் போல்பூர் என்னுமிடத்திலுள்ள வரகவி ரவீந்திரநாத் டாகோர் ஏற்படுத்திய சாந்திநிகேதன பாடசாலையிலுமே இப்பொழுது விசேஷமாய் நடந்து வருகிறது.

---

## The Economic Value of Education.

THE NATURAL DEVELOPMENT OF THE CHILD-MIND.

"The imagination must be the child's. He must first of all see clearly. Then out of the whole world of metaphors and comparisons he may choose what he likes."-*Madame Montessori.*

"Her theories of auto-education appeal to the Modern American Spirit ... It is an age consecreted to the worship of efficiency and the prevention of waste. Therein lies one great reason for the growth of the movement for the conservation of natural resources, etc, all of which are extolled as making for the scientific and economic management of the country's affairs. The Montessori system is similarly acclaimed as a preventive of the waste of human energy and labour.

"What we need is a grater efficiency on the part of every one, a higher appreciation of the value of labour in all directions, and this can only come by beginning very young by making children do something well and learning to do other things better all the time. Our wasted energy is enormous . . . If the Montessori method can reach to the essential fact that it is our duty to work most of our lives and work well, it will be a great boon.''

'There is no doubt that Madame Montessori's methods are destined to effect a revolution in this country (America) leading to less waste and greater efficiency.''—*Extracts from a series of five articles in the London Times.*

## வித்யாதத்துவமும் போதனாமுறையும்

சேட்டு மட்டோய்ச் சிக்கன வாழ்வுக் கின்றி யமையாதது: குழந்தை-மனம்.

மான்டிஸ்ஸரி யென்பாள் அவளொரு பெண்பிள்ளை. மனமாயைவிட்டவள், மஹத்-தத்துவம் கண்டவள். கனமோகம் கொண்டே குழந்தைகள் மனம் விரியக் கங்கணம் கட்டியம்மா, உழைக்கவே புகுந்தவள். இத்தலி தேசத்தில் ரோமாபுரியிலே பிறந்து வளர்ந்தவள். பேரன்பு தூண்டவே குழந்தைகட்காகத் தான் உழைக்கவே புகுந்தவள். மனதின் சுபாவத்தை மயக்கின்றிக் கற்றவள். கல்வியைக் கற்றவள் கற்றபடி நின்றவள். கல்வியினுண்மையை ஒளவைபோற்கண்டவள். கற்பகத்தருவன்ன நினைத்ததை முடிக்கும் நிகரற்ற திறன்மிக்காள். சற்றதோர் கல்வியும் மனப்பழக்கமென்றேகரதலாமலகம்போல் கண்டதையுணர்ந்தவள். உணர்ந்ததை உலகுய்யஓதவே துணிந்தவள். துணிந்ததோ ருண்மையிற் செல்வாக்குமுடையவள். பணந்தரு பாக்கியமெல்லாம் உல

கிலே மனந்தெளி பாக்கிய மில்லாமற் போமாயின், இன்னலே விளைக்குமென் றன்னவள் கண்டதை, அனைவரும் கண்டுய்ய வேண்டுமென் றுழைப்பவள். அத்தகைமாதவள் அருமையாய் மனந்தெளியப் பெற்றேயுழைப்பவள். உண்மையில் வித்யாதத்துவத்தையுணர்ந்தவள். மனோசக்தி வீண்போக லாகாதென் றுண்மையில் சங்கல்பசக்தி பலிக்கவே யுழைப்பவள். சங்கல்பசக்தியதே நினைத்தது முடிக்குமாற் றல் அளிக்குமென் றுணர்ந்தவள். உழைப்பே பிழைப்பும் பிழைப்பே யுழைப்புமாய் உலகுய்யத்தானுய்ந்துழைப்பதேமன்பதைக்கடனென் றுணர்ந்தவள். இத்தகையன்னாள் இயற்கையாய்த் தான் விரியும் அறிவென்றுணர்ந் ததற்கேற்கவே மனம் விரியக் குழந்தைகளை மாண்பாக வளர்க்கவே வேண்டுமென் றெங்கும் உபதேசம் செய்தே தான் வருகிறாள் பாரம்மா! அவள் செய்யும் முயற்சிகளை, அண்டமெல்லாம் பரவிவரும் லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் விஸ்தாரமா யொருவர் விவரித்தேயெழுதியுள்ளார். உலகுய்ய வேண்டுமானால் உலகறியும் 'மனம்'தெளியவேண்டிவரும். மனந்தெளிய வேண்டுமென்றால் குழந்தை-மனம் மாறாதே யிருக்கல் வேண்டும். குழந்தை-மனம் தானே குணமெல்லாம் உண்டுபண்ணும். மாசுமருள் படியாதே மனந்தெளிய வேண்டுமானால் குழந்தைகளை மாண்பாகக் குட்டறிந்து வளர்க்கல் வேண்டும். குட்டறிந்து வளர்க்கவுமே மனோதத்துவம் தெரியல்வேண்டும். மனமென்பதுள்ளத்தின் கண்ணாடி நிழலொக்கம். உள்ளத்திற் கள்ளமொன்று மில்லாமற் கரையுமானால், உள்ளமதும் தானாக வுருகியேதான் ஸ்படிகமாகும். உள்ளமும் ஸ்படிகமானால் உள்ளறிவு தான் விளங்கும். உள்ளறிவு விளங்குவதே கள்ளமறக் கல்விகற்றல். கல்வி கற்றல் என்பதுவும் மனப்பழக்கம் தானாகும். மனமென்பதென்னவென்று விசாரிக்கப் புகுந்தோமானால் நினைப்புமறப்புமாய் நின்றியங்கும் சக்தியது. பொறி-புலன்கள் என்று சொல்லும் தசேந்திரியங்கள் மூலமாக அறியும் அறிவு ஒன்றுண்டு. அஹம்புறம் என்று சொல்லும் கரணங்கள் (மனசு, புத்தி, சித்தம், அகங்காரத்தோடு,உள்ளம் சேர்ந்தது) ஐந்தோடு, கருவிகள் தான் (இந்திரியங்கள்) பத்தாகும். அறிவானோட்' அறிபொருளும் சேர்ந்து மொத்தம் பதினேழு. இவையெல்லாம் விளங்குவது அறிவு ஒன்றால்என் றுணர்ந்தால்,வித்தியாதத்துவங்கள் பதினெட்டாம் சங்கியையினால். அறிவுண்டு அறியாமை தானுண்டிப் பதினெட்டில். இப்பதினெட்டிற்கதிஷ்டானமாய் அமர்ந்திருப்பாள் வித்யேசுவரி.

"மூவாறு மாகிநின்றாள் வித்தையோ டவித்தை
யாம் கலைகளேன்ன, காமியமென்ன !"—

என்றதனால் ஸ்ரீவித்தை என்னும் பூரண வித்தையின் வித்யாதத்துவம் பதினெட்டென் றெளிதில் தான் உணரலாகும்.

காரண - காரியமென்றுள்ள பிரபஞ்சத்தில் காரணப்பிரபஞ்ச மென்பதையே 'பால்போர் வித்வான்' (Mr Balfour) காரணத்தோரணமென்றுரைத்து வருப்பாரானார்(Causal Series) காரணதோரணமும் உட்பிரபஞ்சத்துள்ளுறையும். அவை தானே காரண-தத்துவங்கள் தாமாகும். அறிவானுக் கனுகுணமாயிருந்துதவும் அவையெல்லாம்(Co efficient or instrumental Cause.)

அறிபொருளுக் காஸ்பதமா யிருப்பதுவே காரியமாம். காரியமாம் பூதங்களை ('Cognitive series') அறிபொருளென்றே யுரைத்து 'சாமான்ய மென்றும் சொன்னார் (Cormonsense view of the external world) 'பால்போர்வித்வான்.'

(Mr, Balfour's Gifford Lecture "on the tangle of science; causal and cognitive series.") or, "சத்தாசாமான்யம்."

"சத்தா-சாமான்ய" மென்றே பகுத்திவற்றைத் தொகுத்துரைப்பர் தத்துவ-தரிசனங் கண்டவர்கள்.

அறிவான்-அறிபொருள் என்றே சொல்லும் பேதம் தானும் உள்ளமட்டில், அறிவு தானும்

அவற்றிடையே இருந்தவற்றைப் பொருந்தச் செய்யும்.

அறிவு 'மனது' மூலமாக உலகைத்தானே சிருஷ்டி செய்யும் (உண்டுபண்ணும்). உள்ளம் ஒன்றச் சிருஷ்டிசெய்யும் சக்தி தானே வாலை (குழந்தை)யென்றுவழங்கப்பெறும். இதையே ஆங்கிலத்தில் அம்மா! அருமையாம் (Imagination) மனோராஜ்யமென்று சொல்வர். வாலையே (குழந்தையே) மனோ ராஜ்யமானல், இளங் குழவிகள் செய்மனோ-ராஜ்யத்தை நாமும்தான் கலைக்கலாமோ! பாலபோதம் என்று சொல்வது மனோராஜ்யம் செய் அறிவு தானே யாகும். இந்த அறிவையடக்கிப் படிப்புச் சொல்வதும் இயற்கையாமோ? செயற்கையிது! இயற்கை யறிவைச் செயற்கையாலே பழக்குவதும் இழுக்கேயாகும். இயற்கையறிவுக் கிழுக்கு வராமல் மனதைப் பழக்குவதே நற்பழக்கம் ஆகும். நற்பழக்கம் இளமையிலே படியாவிட்டால் முடிவிற் கெடுதி வந்தே தீரும். தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டுமால் இளமையிற் செய்கேடு முதுமையிற் பலன்தரும். செடியில் வணைத்தால் வளையும் கொம்பை மரமாய்ப் போனல் நிமிர்த்தலாமோ! ஆகையினலே குழந்தைகள் விஷயத்தில் குணம்பட எல்லாரும் குழுமியே மனமொத்து கனசிரத்தை கொண்டுள்ளே யுழைத்தல் தான் வேண்டும் சொன்னேன். பால-போத ஸமஷ்டி-சேவை ஸாதன சங்க மென்றேற்பட்டுதுவும், மான்டிஸ்ஸரியம்மாள் தானுய்க்கண்டுணர்ந்து உழைப்பதுவும், வித்யாலக்ஷியம் உணர்ந்த மேலோர் ஆதிதொட்டு அருமையாகக் குருபரம்பரை மூலமாகக் குழந்தை-மனம் மாறுதிருக்க வழியீதென்று வகுத்ததுவும் ஒன்றேயாமால், "சாதகர்கள் அனந்தம் போலச் சாதனமுறையும் அனந்த" மென்றே மஹாத்துக்கள் சொல்லும் வசனம் போல், சாதகர்கள் நிலையறிந்து சாதன முறை காட்டல் வேண்டும். இதற்காகவே குருகுலவாஸம் என்று சொல்லும் ஸம்ப்ரதாயம் வித்யாலக்ஷணமாகப் பூர்வந்தொட்டிங்கேயேற்பட்டதுகண்டீர்.

இருட்டைப்போக்கி வெளிச்சம் தரும் விளக்கைப்போல, "குருட்டினை நீக்கிக்குணம் பலதந்து" மருள் தன்னை (மனோமயக்கத்தை) நீக்கும் குழந்தை-மனம். அதையறியக் குழந்தைகளைத் தெய்வமாகக் கொண்டு நாம் தொழல் வேண்டும். இதையே மேற்றிசைமதிவலார் தம் பாஷையில், "Child-Study" என்று சொல்லிக் கையாண்டு வருகிறார்கள். பாலை (வாலை) யென்று சொல்லி யந்தக் குழந்தை-மனம் மாறுமலே யிருக்கும் வழியைத் தான் உபாஸனை யென்றுண்மை யறிந்தோதியுள்ளார் நம்மவர்கள். குழந்தை-மனம் மாறுமல் இருக்கக்கற்றூர் தாமே யம்மா குழந்தைகளின் குணமறிந்து போதிக்க வல்லராவர். ஆகையினல் பெற்றோர்கள் அருமையாத் தாம் பெற்றெடுத்த குழந்தைகளைத் தாமறிந்து அவர்கள் குழந்தை-மனம் மாறுமலே மனம்விரியப் பழக்கல் வேண்டும். குழந்தை-மனம் மாறுதாகில் குணங்கள் பல தானே வரும். வாக்குச் சுத்தியோ டிருதயசுத்தியும் பலித்ததானல் வாக்குவித்தியும் சங்கல்பஸித்தியும் தானேயுண்டாம். சங்கல்பஸித்தி யுண்டானல் நினைத்தது முடிக்கும் ஆற்றலுண்டாம். நினைத்தது முடிக்கும் ஆற்றலுண்டானல், செட்டும் மட்டுமாய்ச் சிக்கனமாக ஆயுராரோக்கிய ஸம்பத்துப்பெற்று வாழலாமே. வாழ்நாளும் வீண்நாளாகாதம்மா! ஸத்தியம் இது: பத்தியம் சொன்னேன். அநுஷ்டித்துப் பார்த்தாலது உண்மையாகத்தான் பலிக்கும். மூத்தோர்சொல் வாக்கிதம்மா.

---

## Easy Talks on Health Culture. II.

### Cause, Prevention and Cure of Disease.

*"Health is Wealth !!"*

"The subject of health is one which interests every one. We all want to know how we can maintain the best degree of health, or, having lost it, how it can be regained. Perhaps there are some of us who cannot do very much to improve our state of well-being, and yet I am almost persuaded from whatI have seen accomplished that we can improve our state of physical

efficiency fully fifty per cent by taking heed of those things which tend to build up bodily resistence. The struggle against disease on the part of the human race has been a long and bitter warfare, and it would appear that man has been much the loser in the conflict. Considered biologically, man's active, useful life should be from 100 to 125 years but how few there are who enjoy that privilege to-day. In Europe and America the average life of man is 45 years, and in India I believe it is even less—only 25 years. Out of every 1000 deaths, only 66 are due to old age, 934 being brought about by some disease or other which investigators tell us are largely preventible. Good progress has been made along the line of preventing disease. and also in curing disease. Especially is this true of the acute infectious disorders."

### சுகஜீவ ஸாதன ஸம்பாஷணை. II.

வியாதியின் சாரண, மாரண, பரிகாரங்கள்.

ஆயுராரோக்ய ஸம்பத்து ஸித்தி.—இந்தவாச்சியம் ஆயுஸ், ஆரோக்கியம், ஸம்பத்து இம்மூன்றும் சேர்ந்து ஸாதனமுறை கூடியதால் ஸித்திப்ப தொன்றாயிற்று. மனுஷனுக்கு தீர்க்காயுஸ் நூறு. பூரணயுஸ் நூற்றுக்குமேல் நூற்றிருபத்தியைந்து வரையிலென்பர் (100-125). அரோகதிடகத்திரசரீரமுடையவர்களே நூறு (100) வயசு ஜீவித்திருக்கலாம். 100-வயசு ஜீவித்திருந்து ஜீவதிசையின் பலனாகிய ஆத்ம தரிசனம் கண்டவர்களே நூற்றுக்கு மேல் நூற்றிருபத்தியைந்து வயது வரையில் ஜீவித்திருக்கலாம். ஆத்ம அநாத்ம விருத்தியென்கிற இரண்டில் அநாத்ம விருத்தி 100-வயசு வரையில். அதாவது மூன்று தலைமுறை காலம் நீடித்திருக்கும் குழந்தைகளே உங்கள் அத்தை பாட்டிகள் பேசிக்கொண்டிருப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்களானால், கொள்பேரன் எடுத்தபிறகே சாவதற்குக்காலம் என்றுள்ளஐதிக நம்பிக்கை அவர்களிடத்திருப் பதை யறியலாம். ஒரு தலைமுறைக்கு 35-வயது சராசரி வைத்துப் பார்த்தால்(பூர்வத்தில் 35-வயதுக்கு மேல்தான் கலியாணம் செய்து கொள்ளக் காலம்என்று சொல்லியிருக்கிறது) சீமந்தபுத்திரன்பிறக்கும்பொழுதுதகப்பனுக்குக்குறைந்தது 36-வயசிருக்கும், அந்தப் புத்திரனுக்கு 36-வயசில் சீமந்த புத்திரன் பிறந்தால் பாட்டனுக்கு 72-வயதாகிவிடும். இதுதான் (Patriarch) என்று சொல்லும் குடும்பத்தலைவன் வயசு. இந்த வயசில்தான் முதியோர், மூத்தோர் என்கிற பட்டத்துக்குரியவராவர். பேரனுக்குப் பிள்ளை பிறக்கும் பொழுது அவனுக்கொரு 36-வயதாகவேண்டும். அப்பொழுது கொள்பாட்டனுர்க்கு வயது 108. சஷ்டிபூர்த்தி (60-வயதானபின்) சாந்தி, ஸதாபிஷேகம் (108-பூர்ணசந்திர தரிசனமானபின் செய்து கொள்ளும் அபிஷேகம்), இவையெல்லாம் தேஹத்தின் வயஸோடு மனோபக்குவத்தையும் குறிக்கும் சடங்குகளாம். 35-வயதில் பிரஹ்மசரிய விருகம் முடித்து கிரஹஸ்தாச்ரமம் புகுந்தவன் 60-வயசில் ஸம்ஸாரமோஹம் விட்டு ஆத்ம விவாகம் செய்து கொள்கிறான் அதாவது ஆத்மாவைப் புருஷனாகவறிந்து தேஹம் பிரகிருதி ஸம்பந்தமானதால் ஸ்திரீ தர்மத்தை யனுஸரித்து அது ஆத்மாவாகிய புருஷதத்துவத்துக்கு அடங்கி அதற்கு அனுகுணமாக இருந்துதவி வாழவேண்டும் என்று உள்ளபடிஉணர்ந்து, அந்தப்படிக்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞவிபாக யோகதர்மத்தால் ஆத்ம-அநாத்ம ஸம்யோக ஸம்பந்த ரஹஸியத்தை ஸ்வானுபவரீதியாக அறிந்து வாழத்துவக்குகிறான்.

கிரஹஸ்தாச்ரமத்தில் ஆண்-பெண் ஸம்பந்தத்தின் உறவு-மர்மங்களை யுணர்ந்தவன் அந்த அனுபவ முதிர்ச்சியில் சோகமோகங்கடந்து 60-வயசானபின் புருஷ-ப்ரகிருதி ஞானவித்தியால் புருஷ-ப்ரகிருதி ஸம்பந்த மர்மங்களை யுணரவேண்டி "உடம்பினைப் பெற்ற பயனும்" பேறு பெறப் பிரயாஸைப் பட்டுழைக்கிறான், ஸம்ஸாரவிருத்தி யடங்கி (அதாவது சுகதுக்கானுபவ முணர்ந்து) மனோவிர்த்தியிற் பிரவேசித்து க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞவிபாகயோகத்தால் ஆத்ம-அநாத்ம ஸம்பந்த ரஹஸியங்களை யுணர்வானுகிறான்.

"அமாவாஸை பூரணை யாகு மவர்க்குச்
சமனு முயிர் உடம்புதான்"

என்ற ஔவை-குறளிற் சொல்லியபடி சூந்ய வெளியில் அருள்வெளி கண்டுய்யும் வரையில் க்ஷேத்ர-க்ஷேத்ரஞ்விபாக யோகத்தால் ஆத்ம-அநாத்ம விசாரம் செய்து, அநாத்ம சப்தமாகிய இருளில் (அமாவாஸையில்) ஆத்மசப்தமாகிய (பூரணசந்திர) ஒளியைக் கண்டு உயிர்-உடம்பு இவற்றின் உறவு மர்மத்தை, ஸ்திரீபுருஷ தர்மத்தால் ஆண்-பெண் உறவு மர்மத்தை கிரஹஸ்தாச்ரமத்தில் உணர்ந்தது போல், 60-வயதுக்குமேல் வித்திக்கும் சோகமோக சாந்தியின் ஸாதகத்தால் ஸாதனுதீரனுகி உண்மையுணர்கிறுன்.

இதற்குமேல் வானப்ரஸ்தாச்ரமம் புகுந்து அதாவது பிரகிருதி தர்மத்தை விசாரித்துணர்ந்து(Nature-study)பிரகிருதிவிமுக்தனுகப் பார்க்கிறுன். எல்லா பந்தமும் விமுக்தியை உத்தேசித்தேயன்றி வேறுவிதமல்ல. ஸம்ஸார பந்தம் நீங்கி விமுக்தி பெறுவதே "சஷ்டி பூர்த்தி சாந்தி; மாயை மயக்கம் நீங்கி விமுக்தி பெறுவதே ஸதாபிஷேகம்" (நூறுவயதாகிய தீர்க்காயுஸ் பெறற் பேறு.) நூறுவயசுக்குமேல் 125 வயசுவரையில் ஆத்மாநுபோகத்திலிருந்து உலகுய்ய உண்மைத் தர்மத்தை (ஸநாதநதர்மவிருதமிருந்து) அநுபவமுறையால் போதித்து வருகிறுன். இவனுக்குத்தான் மஹானுபாவன் என்கிறபேர் உரியதாகும்.

தேஹம் ஸ்வபாவதர்மத்தால் முதிர்ச்சி பெறுவது 21-வயதுமுதல் 36-வயசுவரையில். அதற்குமேல் மனுேபாவ முதிர்ச்சி 60-வயசுவரையில் நடக்கும். ஆத்மயோக முயற்சி 60-முதல் நடந்து 100-ல் ஸம்பூரணமாகும். இந்தக்காலதில் மனுேபாவம் நீங்கி மஹத் (Universal mind) பாவம் உண்டாகி நிவிருத்தி ஸாதனத்தை யளிக்கும். 100-வயசுக்குமேற் சித்தாத்மனு யிருந்து சுகானுபவம் வித்தித்து பூஜ்பனுயிருந்து மஹானுபாவர் என்னும் சுகிர்தப் பேர் பெற்று உலகுய்யும் வழிகாட்டும் காலம். அதற்குமேல்தான் விதேஹ கைவல்யமாகிய பரிபூரணதிசை வித்திக்கும் காலம்.

இவையெல்லாம் சாஸ்திரோக்தமாய் வித்யாஸம்பந்நராகி வாழ்வார்க்குரியவாழ்வு.

இதற்குக் காலநிர்ணயம் எப்படியென்றுல்:- உசுவாஸ-நிசுவாஸ-மூர்ச்சையென்கிற மூன்று லக்ஷணமுள்ள மூச்சுக்காற்று ஒருதரம்ரேசக-பூரக-கும்பக மியற்றின் அது பிராணசக்தியின் அளவில் ஒன்று (ஒரு மூச்சு) என்கிற மாத்திரை (அளவு) ஆகும்.

வேலை செய்கிற பெண்டுகள் (நெல்லுக்குத் துகிறவர்களிடம் இதை நீங்கள் காணலாம்) "அக்காள் கூட ஒரு மூச்சப் போடுகிறுயா?" என்று கேட்பதின் அருத்தம் "ஒரு மூச்சுப் பிடிக்கிறகாலம்" கூடவிருந்து ஒத்தாசை செய்சுறுபா? என்று கேட்டதாகும். அவர்கள் உலக்கைதூக்கிப்போடும் ஒவ்வொரு குத்தும் ஒரு மூச்சுக்கால அளவைப்பொறுத்ததாயிருக்கும். உலக்கையை மேலே தூக்கும் காலம் பூரகம் (உசுவாசம்). தூக்கின உலக்கையைகுறிதப்பாமல் இலக்குப் பார்த்து நிறுத்தும் காலம் கும்பகம் (மூச்சடங்கிநிற்கும்) காலம். உலக்கையுரலில் விழுங்காலம் ரேசகம் (நிசுவாஸம்). இது ஹூம்காரத்வனி யோடு விழும். பிறகு இளைப்பாறும் காலம் ரேசககும்பகம் எனப்படும். மற்றொன்றுக்கு(உலக்கையை உயரத்தில் தூக்கி இலக்குத்தப்பாமல் பிடிக்கும் காலத்துக்கு) பூரககும்பகம் என்று பேர். இதுதான் மூச்சளவு ஒன்று.

இப்படி 21,600 - (இருபத்தியோராயிரத்து அறுநூறு) மூச்சுக் கொண்டது ஒருநாள், இந்த ஒருநாள் பூமிக்கு ஒரு மூச்சுக்கணக்காகும். ஆதலால் 21,600-நாட் கொண்டது (60-வருஷம்,) ஒரு கால அளவு ஆகிறது. 60-நாழிகை கொண்டது ஒருநாள் என்பது போல், 60-வருஷம் (சூரியனுக்கு ஒரு வருஷம் ஒரு மூச்சுக் கணக்கு) கொண்டது ஒருநாள் கால அளவாயிருக்கிறது.

ரேசக-பூரக-கும்பகம் சேர்ந்த (பிராணுப்பாமம் என்கிற) மூச்சுக்கணக்கால் 21,600-கொண்டது ஒரு ஜீவநாள், (பூமிக்கு ஒரு மூச்சுக் கணக்கு). ஒரு நாளைக்கு 60-நாழிகையாக, $\frac{21,600}{60}=360$-நாள் கொண்டது ஒரு வருஷம். (சூரியனுக்கு ஒரு மூச்சுக்கணக்கு)

$\frac{360}{12}=30$-நாள் கொண்டது ஒரு மாசம் அல்லது மதி. (மதி = சந்திரனுக்கு ஒரு மூச்சுக் கணக்கு)

(Unit) ஒன்று என்பது அளவை கணக்கைச் சுட்டும்.

(Number) நவ சங்கியை பிரகிருதியளவாகிய (நவவியூக) எண்ணைச் சுட்டும் கணக்கு.

(Ten) தசமம் (பத்து) பிரகிருதி-புருஷ சம்பந்தத்தைக் குறிக்கும் கணக்கு.

(Hundred) சதம் (நூறு) என்பது பிரகிருதி-புருஷசம்பந்த முதிர்ச்சியில் பிரகிருதி-புருஷ ஒற்றுமையைக் குறிக்கும் கணக்கு.

(Millennium) ஸஹஸ்ரம் (ஆயிரம்) பிரகிருதி புருஷஸம்பூரணத்தைக்குறிக்கும் கணக்கு.

இங்கிலேயில் தான் ஔவையார்சொல்லிய "சமனும் உயிருடம்புதான்" என்ற அனுபவம் வசிக்கும். இதைத்தான் (Perfection of Nature) என்று சொல்கிறது. "பூரணி, புராதனி, ஸுமங்கலி, சுதந்தரி" யென்று தாயுமானவரும் மற்ற எல்லா வித்யாஸப்பந்நர்களும் அங்கிலேயைத் துதித்திருக்கிறார்கள். இதுதான் ஜீவதத்துவ சாஸ்திரக்கணக்கு. ஜீவதத்துவ சாஸ்திரம் என்றால் (Biology) என மேற்றிசையார் இப்பெயரால் சொல்வது அறைகுறையான சாஸ்திரம். அது சாசுவதமான தத்துவத்தை ஐபந்திரிபற விளக்காது. ஆனல் அவர்களும் இவ்வழிபற்றி வந்துகொண்டிருக்கிறார்கள். மேலே சொல்லியவை யெல்லாம் ஆயுர்வேத ஸம்மதமான உண்மைகளே. ஆயுர்வேதம் என்பது அமிர்த கலசத்தோடு பிறந்தது. அதாவது அமிருத்தியுதத்துவம் (மாரண நிவாரண உண்மை) நிபாமுகமாகப் பிறந்தது. அரோகதிடகாத்ரமின்றி அமிருத்தியுதத்துவம் உணரப்பட மாட்டாதாகையால், ரோகநிவாரணம் அதற்கு இன்றியமையாத துணைக்கருவியாயிற்று.

கர்த்தா, கருவி, காரணம் என்கிற மூன்று வித காரணங்களில் ஆயுர்வேதகர்த்தா (Efficient cause) க்ஷீராப்தியில் [Ocean (Infinite expanse) of Consciousness] சந்திரன், லக்ஷ்மி, இவர்களோடு உண்டான தன்வந்தரி. (இவர் அமிர்தகலசத்தோடு தோன்றினர்).

ஆயுர்வேதத்தின் முடிபுநோக்கு அமிருத்தியுதத்துவஸ்தாபனம் ஆகையால் அதற்குக் கருவி (Co-efficient Cause or Instrumental Cause) அமிர்தம். மூன்றாவதான உபாதனகாரணம் (Material cause) தேவாஸுரர்கள் சாகாவரம் வேண்டி பாற்கடலை (Ocean of Consciousness) கடைந்ததனாலுண்டான சலநசக்தி. இந்தச் சலநசக்தியின் அம்சமே மனிதனுடைய மனோசக்தியாக விளங்குகிறது. இந்த மனோசக்தியை சித்த விருத்தி யென்றும் மனம் என்கிறபாவனு சரீரத்தை (Mind Stuff) சித்தம் என்றும் சொல்லுகிறார்கள்.

ஸ்தூலசரீர தேஹம் (ஸப்ததாதுக்களாலாயது); பாவனசரீரம் சூக்ஷ்மதேஹம், மனஸ், அல்லது சித்தம். காரண சரீரம்: அமிருத்தியுதத்துவமாகிய அஜ்ஞாசக்தி. இது அழியாத் தன்மையுள்ள ஆத்மாவுக்குஉறைவிடமாயிருப்பதால் இதை அமிர்தகலசம் என்பர். தத்துவ ஞானிகள் இதை அறிவின் ப்ரதிபிம்பம் என்பார்கள். உபாஸனமுக்தர்கள் இதை வித்யா தேஹம் என்றும், அல்லது சுருக்கமாய் அவித்யை என்றும் சொல்லிப்பூஜிப்பர்.

(1) ரோகத்துக் கெல்லாம் காரணமாயிருப்பது தேஹபாவனை. அதாவது "நான் தேஹம்" என்று நினைத்துத்தடித்துப் போதல். இதை ஆதி யென்றும் ரோகத்தை வியாதி யென்றும் சொல்லியிருக்கிறார்கள்.

(2) ரோககாரணமாகிய தேஹபாவனை நசித்ததனால் அஃதோடுண்டான ரோகமும் மாரணமாம், நசித்துப்போம். (ஆனல் அது பின்னும் தேஹோஹபாவனையோடு முளைக்கும்).

(3) ரோகநிவாரணம் காரணசரீரமாகிய(வாசனாதேஹம்என்கிற,) அமிருதகலசத்தினுள் அமிர்த்தியுதத்துவ மாகிய(Immortality of Soul) அமிர்தத்தை யுட்கொள்வதால் தான் வித்திக்கும். இந்த மூன்றையும் ஐபந்திரிபற குருமுகமாய் விசாரித்து உண்மை யோர்ந்துணர்ந்தால் ஆயுராரோக்கிய திடகாத்ரஸம்பத்து வித்திக்கும். இது ஸர்வமதஸம்மதமான சாஸ்திர உண்மை.

---

## The First Need of the Village.

### The Influence of Education.

The first need of the village is education suited to its needs. "The teacher in ancient days moulded the life of the boy, and imparted to him the education needed for him. The village sohools now scarcely exercise any influence on village life. The school is not in harmony with the needs of the village. The curriculam of studies is the same for all the castes and classes in the Presidency, for towns and villages, irrespective of the needs of the student. The teacher is town-bred. The official Directer of educational studies has his eye not on the requirements of any village but on the Madras Presidency as a whole. The courses of study prescribed are really formulated for the use of town boys and are calculated to draw the boys away from villages. The studies are literary and do not make the village boys better farmers or agriculturists. To the girls, such a course of studies is thoroughly unsuited. We want the entire curriculam to be modified to suit the needs of a particular village. Interest may diverge with each village or cummunity, and the children are brought up in the environment peculiar to their village and community. All this can only be done by the members of the village cummunity itself. They have to meet and discuss the needs of their village, and the purposes to be attained by attendance at schools. An official Inspector trying to find out what they want and carrying out the wishes so ascertained can never be a sufficiant substitute. A shool under village supervision will interest and attract both women and men. We know now that when schools are started in villages in which teachers known to them teach subjects like music, the women flock to them. That the officials may sometimes be white men need make no difference. A school under the management of the members of a village cummunity, teaching the subjects required by them, will also introduce a new element of interest in the village community. They will take a pride in this school, which will be a meeting place for them.—The Hon'ble Mr, Justice C. Sankara Nair in the Modern Review.

"The basis of village life must be a proper system of education devised to suit the needs of the village."

## கிராமவாசத்துக்கின்றியமையாத நாட்டுப்படிப்பு.

படிப்பு என்றால் ஏட்டுப் படிப்பு மட்டும் படிப்பாகாது. மனம்படியக் கற்றலே படிப்பாகும். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றார் ஔவையார். மனப்பழக்க மில்லாத படிப்பு படிப்பாகமாட்டாது. கிளிப்பிள்ளையைப்போல் சொன்னதைச்சொல்லக் கற்பதினால் பிரயோசனமில்லை. வெளியாடம்பரம் மட்டும் மனப்பழக்கத்துக் கனுகூலமாகாது. எதையும் திரிகரண சுத்தியோடு பயிலவேண்டும். திரிகரண சுத்தியாவது மன, மொழி, மெய் யென்கிற முன்று கரணங்களும் ஒத்துழைத்தலாம். மெய் (உடல்) கொண்டு பழகுவதெல்லாம் காயிகம் ஆகும். இதையே "Physical Exercise" என்பர் ஆங்கிலத்தில். மனம் கொண்டு பழகுவது மானஸம். இதை "Mental Exercise" என்பர். இந்த மனப்பழக்கமெல்லாம் சித்தவிருத்தியும் சித்த-விருத்தி நிரோதமுமாயிருக்கும். குழந்தைகள் எதைக் கண்டாலும், இது ஏன் இப்படி யிருக்கிறது? அது ஏன் அப்படி யிருக்கிறது? என்று காரண காரிய தோரணை யறிந்து கொள்ளச்செய்யு முயற்சி சித்தவிருத்தி யாகும். இது இயல்பாயமைந்துள்ளது. சித்தம் வளர்ந்து நினைக்கும் சக்தியுண்டாகி எண்ணம் விரிவது மனோதர்மம். அப்படி யென்றால் மனதின் இயற்கையாயமைந்த சக்தியின் விலாஸம், இந்த சித்த

விருத்தி வளர்ந்து பிரவாகமாக ஓடும்போது விஷயப்பற்று ஜாஸ்தியாகும். விஷயப்பற்றின்றி சித்தவிருத்தியில்லை யானாலும், அது மட்டுக்கு மிஞ்சி யதிகரித்தால் ஆபத்து விளைக்கும். ஆகையால் ஓடுகின்ற ஆற்று நீர் கரை கடந்து போகாது காப்பதுபோல் சித்தவிருத்தியினால் விஷயப்பற்றில் விழ்ந்து மனக்கண் பஞ்சடைந்து போகாதபடி அதை நிரோதம் செய்துவரல்வேண்டும். அதாவது தடுத்தாண்டு வரவேண்டும். இது மனதை விவேக ஞானத்தோடு சேர்ப்பதால் மட்டுமே சாத்தியமாகையால் இதற்கு "யோகம்" என்கிற பேர் வழங்குகிறது. சித்தவிருத்தி ரூபமான மனசு விஷயப்பற்றினாலே வளரும் ஸ்வபாவமுடையதாயிருப்பதால் அதற்கு நித்தியாநித்திய வஸ்து விவேகம் இயல்பாக இல்லையாகும். பிசைந்த மண் குயவன் தொட்டபடி யெல்லா மிசைந்து பாண்டமாவதுபோல், பக்குவ மனசு ஆத்துமா நினைத்தபடி யெல்லாம் இசைந்து 'அதுவதுவாகும்.' பக்குவமனஸ்தானே சித்தம் என்று சொல்லப்படும். இது பாவனா சக்தியை ஒட்டி நிற்கும். பாவனம்=நினைத்தல். (இதில் மறத்தலுமடங்கும்). நினைப்பின்றி மறப்பும், மறப்பின்றி நினைப்பும் இல்லை. இப்படி நினைப்பு-மறப்புமாயிருப்பதே மனம். அவிவேகத்தினால் வ்யவஸ்தையின்றி விஷயப்பற்றில் மூழ்கிக் கிடக்கும் மனதை விவேக ஞானத்தோடு சேர்த்துப்பூட்டி அதற்கிசைந்து நடக்கும்படி செய்தலே மனதைப் பழக்குதலாகும். இப்படி மனவினால்செய்யும் காரியமெல்லாம் மானஸம். இது காயிகம் என்கிற தேஹ சம்பந்தமான அப்பியாஸங்களுக்கு ஒத்திருக்க வேண்டும்.

மானஸம் (Mental Exercise) காயிகம் (Physical Exercise) என்கிற இரண்டுக்கும் மத்தியில் அவ்விரண்டையும் இணைப்பதாயிருப்பது வாசகம். அதாவது வாக்கு. மனமும் வாக்கும் ஒத்திருந்தால்தான் தேஹம் சொன்னபடி கேட்கும்.

வாக்குசுத்தம் (வாய்மை) இல்லாவிட்டால் மனசுத்தம் (அஹத்தூய்மை) உண்டாக மாட்டாது. மனம் அசுத்தப்பட்டால் அறிவிழந்துபோம். ஆதலால் தான் இராஜாதிராஜர்களானாலும் பொய் சொல்ல அஞ்சுவது. ஹரிச்சந்திரமாகாராஜா எல்லா இன்னலையும் அனுபவித்துக்கொண்டு பொய் சொல்ல இசையாதிருந்ததின் மர்மம் இது தான்.

"பதியிழந்தனம், பாலனையிழந்தனம், படைத்த
நிதியிழந்தனம், இனி நமக்குளதென வினைக்கும்
கதியிழக்கினும் கட்டுரையிழக்கிலேம் என்றான்
மதியிழந்து தன் வாயிழந்தமாதவன் மறைந்தான்."

"அரசன் தன் பட்டணத்தை (தலைநகரை) யிழந்து தவித்தான்; பாதகமில்லை. பெற்ற பாலனை யிழந்தான்; பாதகமில்லை. படைத்த நிதி யிழந்தான்; பாதகமில்லை. இனி வரும் கதியாகிய மோக்ஷஸாதனத்தை யிழந்தாலும் இழப்போம்: வாக்குத்தவரமாட்டோம்" என்றான். வாக்குத் தவறினால் அஹத்தூய்மை போய் விடும். அஹத்தூய்மை போனால் மனத்தெளிவு மாறிவிடும். மனத்தெளிவு போனால் மாயை வந்து மூடிக்கொள்ளும். அறிவிழந்து தவிக்க வேண்டும். அப்பப்பா அந்தக்காரியம் செய்ய எங்களாலாகாது என்று விட்டார் விவேகசாலியான அரிச்சந்திர மஹாராஜா. உலகத்தில் ஸத்ய விருதத்தை யனுஷ்டிப்பவர் யார் இருக்கிறார்கள்: ஒருவருமில்லை யென்று வசிஷ்டரோடு சபதம் கூறிக்கொண்டு அரிச்சந்திரனைப் பொய் சொல்லச்செய்யாவிட்டால் என் தபவில் பாதியை இழந்து விடுவேன் என்று பந்தயம் கட்டி வந்த விசுவாமித்திர ரிஷி தன் சபதம் பலிக்காமல் தபவிழந்து அதனால் தன் தேஜஸ் (மதி இழந்து மறைந்தார்.) இந்த மர்மம் கிராமவாஸிகள் எல்லாருக்கும் தெரியும். பட்டணவாஸிகள் அண்டப்புளுகர்களாயிருப்பது இதன் மர்ம முணராமையினாலன்றி வேறல்ல. முழுப்பூசினிக்காயைச் சோற்றில் மறைப்பவனைப்போல் அகாதமான புளுகை யெல்லாம் கட்டி விட்டு ஸர்க்கார் சட்டத்துக்குள் மட்டும் அகப்பட்டுக்கொள்ளாமல் ஜாக்ரதையாக விருந்து வருகிறார்கள். ஐயோ! ஸர்க்கார் சட்டம் எந்த மட்டும் செல்லும்!

'தலைக்கு மிஞ்சின ஆக்கினையில்லை; ஆஸ்திக்கு மிஞ்சின அபராதமில்லை'' என்பது கிராமத்தார் சொல்லும் பழமொழி. அறிவோ ஆஸ்திக்கும் பாஸ்திக்கும் எட்டாதது. ஐசுவரிய மெல்லாம் அதுவாயிருந்து, அதுவின்றியுள்ள ஐசுவரியம் எதுவும் ஐசுவரியமாகாதபடி செய்ய வல்லது. அறிவை இழந்து விட்டால் அப்புறம் மனிதனுக்கு என்ன இருக்கிறது. மனித ஜன்மமே போய் விடுகிறது. அறிவிழந்த பின் மனிதன் ஜடமாய்விடுகிறான். பிரஹ்லாதனுக்கு பகவான் பிரஸந்நராகி யோகவித்தை முழுவதையும் கற்றுக்கொடுத்து "அப்பா, இனி உன்னைத் துக்கமும், ஸம்ஸாரமும் பற்றாது. நிர்ப்பயமாய் உலகானுசரணார்த்தம் நீ இராக்ஷஸர்களுக் கரசனாயிருந்து வருவாயாக. உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்! தருகிறேன்.'' என்று சொன்னபோது, அக்குழந்தை என்ன கேட்டான்?

"ஸ்வாமி! யோக வித்தையினால் தேஹசம்பந்தத்தினால் பாதிக்கப்படாத அறிவைப் பெற்றேன். இந்த ஸாம்ராஜ்யத்தை ரக்ஷித்துப் பாதுகாக்கும் வழி தான் தெரிய வேண்டும். "யோக க்ஷேமம்'' என்கிற இரண்டில் பின்னதில்லாது முன்னதுமட்டு மிருந்தால் அவன் சீக்கிரத்தில் அதை யிழந்து யோகப்ரஷ்டனாய் விடுகிறான். "அப்ராப்தப்ராபணம் யோக: க்ஷேமௌ லப்தஸ்யபாலநம்'' என்றிருப்பதால் தேஹ ஸம்பந்தத்தினால் பாதிக்கப்படாத தெளிந்த அறிவாகிய பெறற்கரிய பேறு பெற்றேன் தாங்கள் பிரஸாதித்த யோக வித்யா ஸாம்ராஜ்யத்தினால். அப்படிப் பெற்றதைப் பாலநம் செய்ய (காப்பாற்ற) ஒரே வழிதானுண்டு. அது பகவானை மறக்காமல் பக்தி செய்து வருதலொன்றினாலே சாத்தியமாம். ஆகையால் எந்த தேஹத்தை யளித்தாலும் எந்த ஜன்மம் எடுக்கச்செய்தாலும் சரி, எனக்குச்சிந்தை யில்லை. ஆனால் எந்த தேஹத்திலிருந்தாலும் உம்மை மறக்காத பக்தியை மட்டும் தந்தருளவேண்டு''மென்று கேட்டான்.

பகவானும் அவனுடைய சாமர்த்தியத்துக்கு உவந்து அப்படியே வரம் அளித்தார்.

கிராமத்தார் இப்பொழுது வேண்டுவதெல்லாம் உண்மையான வித்யாப்பியாஸம். இது ஏட்டுப்படிப்பு மாத்திரம் ஆகாது. எத்தொழிலில் எத்துறையில் இறங்கியுழைத்து ஜீவனம் செய்யவேண்டியிருந்தாலும் சரி, மனம்படிந்து, தேஹமும் படிந்து நடக்கப் பழகலாம் பாக்கியம் வேண்டும். விவேகம் மட்டும் சிந்தை நிறைந்திருந்தால் விவேகசிந்தாமணியாகிய வரப்பிரஸாதத்தால் எல்லா பாக்கியமும் பெற்று வாழலாம். விவேக சூந்யமான வித்தை அவித்தையே தானாகும். ஆகையால் அவிவேகத்தைப் போக்கி விவேகத்தைக் கொடுக்கும் வித்தை வேண்டும். இது கிராமத்தார் தாமே செய்முயற்சியால் வித்திக்க வேண்டுமே யன்றி அவர்களுக்காகப் பிறர் செய்யும் முயற்சியால் வித்திக்காது. "கட்டிக்கொடுத்த சோறும் சொல்லிக்கொடுத்த வார்த்தையும் எத்தனை நாளைக்கிருந்துதவும்?'' என்பது கிராமத்தார் சொல்லும் பழமொழி. "யோக்யன் தானே பாக்கியனாவான்'' என்றால் "அது வேதாந்தம் கூடாது'' என்கிற வித்யா விற்பன்னர்களு மிருக்கிறார்கள். அவர்களால் கிராமத்தாருக்கு இடையூறு விளைக்கலாகுமே யன்றி அநுகூலம் செய்வது கூடாமையாக விருக்கிறது. சாதகத்துக்கிடமின்றி பாதகத்துக்கிடந்தரும் ஏற்பாடு எக்காலத்தும் வில்லங்கம் விளைக்குமேயன்றி ஸமஷ்டிவாழ்க்கைக்கு நல்லங்கமாகாது. இதை உண்மையாளர்கள் உள்ளபடி ஆய்ந்தோய்ந் துணரல் வேண்டும்.

இதற்கு இன்றியமையாத சாதகம் என்னவென்றால் கிராமவாசத்தின் உண்மையை யுணரல் வேண்டும். இந்த உண்மை யுணர்வது இலகுவான காரியமில்லை. ஸமஷ்டி வித்தையில் பழகினவர்கள் தானே உண்மை யுணர்ந்து ஓதவல்லவராவார். இப்படிப்பட்டவர்கள் நம்மவர்களாக விருந்து நம்மை யறிந்திருக்கவேண்டும்.

**Suchalata's Supreme Act of Sacrifice.**

MAIDEN SACRIFICE OF MODERN SOCIETY.

"Not you, adored father, but I am to be the sacrifice . . . . Only the other day I heard how bands of noble-minded youths had gone from door to door to raise funds for the relief of some people in far away South Africa. But is there no one among them to feel for their own people ? . . . . Then I resolved to save you all and made a sign to the Divine Mother that I would not delay obeying Her merciful call. May the conflagration I shall kindle set the whole country on fire . . . . And now, dear father, farewell ! The hour of sacrifice is come."

## ஸுசிலதா பிராண பரித்தியாகம்.

I

உத்தம சித்தர்க ளாம்யுவ புருஷர்கள்
எத்தனை யோபேர்கள் சுத்தம னத்துடன்
அத்தனை நம்பியே ஆப்பிரிகா சென்ற
மெத்தவு மேழைக ளான ஜனர்க்குச்
சித்தந்தா னிரங்கிச் சீரா யுழைத்தனர்:
அத்தனை பேர்களி லெத்தனை பேர்கள்தான்
உத்தம குலத்திற் பிறந்தென் போலிடர்
உற்றவர்க் குடன்பிறப் பாம்நல சித்தமுளார்?

II

ஐயகோ! தெய்வமே! யாரிடம்போய் முறையிடுவேன்!
வெய்யகோ! என்னரசே! என்னுள்ள முருகுவதை
மெய்யவோ! உணர்ந்தும்நீ யுணராது போலிருப்ப
தையவோ! என்னதனு லென்றேழை யறிகிலனே!
பையநான் பசுங்குழந்தை படுந்துயரை யுன்கண்ணால்
வெய்யநீ பார்த்திருந்தும் தீர்க்கிலையா விப்போதே
மெய்யவென் னம்மையிடம் முனைந்துநான் மூறையிடு
செய்யவெனக் கிதுசமயம்! வதுவையாண் டடிமை கொள்வாய்!

III

அம்மவோ! அன்னையே! அலறுகிறேன் உனக்கூவி
எம்மவர்கள் இப்புவியி லிதயங்கல்லாச் சமையலுற்றார்!
செம்மையெல்லா முருவெடுத்தே யருள்வடிவா யமர்ந் தவுன்றன்
வெம்மைமிகு பயங்கரமாம் திருவுருவைக் காட்டி யென்றன்
துன்பமெல்லாந் துடைத்தென்னைத் தூயவளாச் செய் துன்றன்
அன்புமிகு திருப்பாதம் தந்தென்னைக் காக்கவேண்டும்.
வன்புதுன்பு நிறையுலகில் வாழ்ந்திருக்கத் தரிக்கிலே னால்
அன்பொழுகுன் திருக்கமல பாதமெனக் குகந்தருள் வாய்!

IV

"துர்க்காலக்ஷ்மி! ஸரஸ்வதீதேவி மஹிஷாஸுர மர்த்த நீஜய!
வித்யாலக்ஷ்மி ப்ரஹஸ்பதிம்வந்தே அத்யாத்மிக சாந்த நீதுபவ
வித்யாரம்பதினே விஜய தசமியாம் ஹே அமிர்ததே!
துவாம்வந்தேது ஸர்வதா!"—என்றுன்னை மனமோய
வோதியேநான் துதித்தழைக்க, ஒளித்திருப்ப துனக்கா மோ!
ஆதியனுதியு மாகியருள்வடி வாயுள்ளத் தமர்நல்ல
சோதியேசுடரே! சுடரொளியின்சுடே! சுடாயிருந் துள்ளுன் வளர்க்குநற்
ருதியே, தாயே! தரிக்கிலேனித்தேஹம் தஹியம்மா ஸ்வாஹா! ஓம்.

V

"முன்னையிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையில்
அன்னையிட்டதீ அடிவயிற்றிலே
நானுமிட்டதீ மூள்க மூள்கவே!"—
என்று சொன்னர் வாக்கை நம்பி
இன்றுன்னைத் துதிக்கிறேன் நான்
நன்று தேஹம் விடுதலென்றே நானுமூட்டு மிச்சிறுதீ
என்றும்விடா திவ்வுலகில் காட்டுத்தீயாவளர்ந்தெரிய வரமெனக்கு நீயருள்வாய்!

---

## CHILDREN'S RECORD OF SOCIAL SERVICE.

---

**A Heroic Maiden's Appeal to Noble-Minded Youths.**

---

"Day before yesterday, late in the afternoon, when you returned home, footsore and weary, after having been out the whole day since the break of dawn, I saw your face, saw the world of anguish and despair which was depicted on it and heard with my own ears those fatal words..."all is lost." That face has never ceased to haunt me since. Those words are

still ringing in my ears. And I heard the rest of that heart-breaking story, how the big mortgage, which you were so sanguine of your ability to put through and which was to furnish the money required for my marriage, had almost at the last moment been cancelled and how the only way out of the difficulty was to raise the money by a mortgage upon the house.

Father, I can't bear that idea. What is marriage to me, except as a means of lifting the weight of anxiety on my account, which lies so heavy on your breast? What social obloquy have you not already endured because I am still unmarried? What heroic efforts have you not already made to find a suitable match for me and with what ill-success? No, the hall of my ancestors will not be trodden by the feet of strangers nor resound with unfamiliar voices. Not you, adored father, but I am to be the sacrifice.

Last night I dreamt a dream, father, which made me take my vow. To the enthralling strains of a music unheard before, and amid a blaze of light as never was on land or sea, I saw the Divine Mother Durga, with benignant smile, beckoning me to the abode of the blest, up above, and then I thought of you father, of the ever sorrow-laden face of my beloved mother and of the dear little ones who have done so much to brighten our home. And then I resolved to save you all and make a sign to the Divine Mother that I would not delay obeying her merciful call.

Father, I have heard that many noble-hearted and educated young men volunteered for philanthropic work for the relief of the suffierers from the Burdwan floods. God bless their kindly hearts, so full of compassion for their suffering fellow-beings. I have also heard that many youngmen have taken a vow not to buy bideshi articles. Only the other day I heard how bands of noble-minded youths had gone from door to door to raise funds for the relief of some people in far away South Africa. But is there no one among them to feel for their own people?

After I am gone, father, I know you will all shed tears over my ashes. I shall be gone, but the home will be saved. Since then I have been pondering on the best way of ending my worldly pilgrimage—Fire, Water or Poison. I have preferred the first and may the conflagration I shall kindle set the whole country on fire !

And now, dear father farewell. The hour of sacrifice is come. All nature is slumbering peacefully and ere long I am going to fall into that sleep which knows no waking. A strange and sweet sensation overpowers me. Up above in my new home, at the lotus-feet of the Divine Mother and lying within the light of uncreated rays, as I used to lie upon your loving breast, I have only to wait a little while till you and mother come!

Your ill-fated daughter,
SUCHALATA.

—*The Hindoo Patriot.*

**MAIDEN SACRIFICE OF MODERN SOCIETY.**

பாலபோத ஸமஷ்டிசேவை ஸாஸநம்.

உத்தம சித்தர்களான யுவபுருஷர்களுக்கு
தைரியசாலியான யுவதிசெய்
விண்ணப்பம்.

தற்கால தாடகை வாங்கு கன்னியாபலி.

*"அன்னையிட்ட தீ அடிவயிற்றிலே*
*நானுமிட்ட தீ மூள்க மூள்கவே".*

ஸ்ரீமதி ஸுசிலதாதேவி ப்ராணத்தியாகம்.

ஸுசிலதா 15 வருஷங்களுக்கு முன் கல்கத்தாவில் ஒரு பிராம்மணகுலத்திற் பிறந்தாள். அவளைப்பெற்றோர்கள் அவளை அருமையும் பெருமையுமாய் வளர்த்து வந்தார்கள். "ஆறிடு மேடும் மடுவும்போல் ஆம் செல்வம்" என்பதும் "செல்வம் சகடக்கால் போல்" என்பதும் உண்மையல்லவா! ஸுசிலதா பொற்கொடி போல் வளர்ந்து வந்தாள். அன்பும்

ஆதரவுமாய் அவளைப்பெற்றோர்கள் அவளைப் போற்றி வளர்த்தார்கள். வீட்டிலுள்ள குழந்தைகளெல்லாரும் அவளிடத்தில் அத்யந்தப் பிரியம் வைத்து அவளைக்குலதேவதை யாகக் கொண்டாடிவந்தார்கள். ஆனால் அவள் குடும்பத்துக்கு கால வேறுபாட்டால் கஷ்டகாலம் வந்தது. தனம் முன்போலின்றிக் குறைவுபட்டது. செலவு அதிகப்படலாயிற்று. ஆனாலும் அவளுடைய தகப்பனார் அதைரியப்படாமல் உழைத்துத்தேடி குடும்பத்தை கௌரவமாய்க்காப்பாற்றி வந்தார். எல்லாம் அன்பும், அமைதியும், ஆனந்தமுமா யிருந்தது. ஆனால் ஸுசிலதாவுக்கு வயது 13 ஆகவும் அவளுடைய பெற்றோர்களுக்கு விசாரம் அதிகப்பட்டது. பிராமணகுலத்திற் பிறந்த பெண் வயது 15-ஆகியும் விவாகமாகவில்லை யென்கிற சொட்டுச் சொல்லைப்பொறுக்க முடியவில்லை. பெண் படித்தவளாயும் புத்திசாலியாகவுமிருந்ததால், அவளுக்கேற்ற வரனுக்கே கொடுக்க வேண்டுமென்று தகப்பனார் பகிரதப்பிரயத்தனம் செய்து வந்தார். படித்தபெண்ணுக்குப் படித்த பிள்ளையாக வேண்டுமென்று பார்த்தார். ஆனால் காலேஜில் படிக்கும் பிள்ளைகளெல்லாரும் வரசொல்கம் அதிகமாகக் கேட்டார்கள். தகப்பனாருக்குக் கைப்பொருளில்லை ஆனால் விவாகம் நடக்க வேண்டியது அவசியமாயிற்று. இப்படி இரண்டு வருஷம் தாமரையிலையில் தண்ணீர் போலத் தவித்து படாதபாடெல்லாம்பட்டலைந்து கடைசியில் ஒருவரனைப் பார்த்து நிச்சயம் செய்தார். வரசொல்கம் ரூபாய் 2000 கொடுக்க வேண்டும்: அதற்குக் குறைந்து சரிப்படவில்லை. வேறு விதியின்றிச் சம்மதித்தார். விவாகப் பேச்சு நிச்சயமாய் விட்டது. ரூபாய்தான் வேண்டும். அதற்காக ஓரிடத்தில் கடன் வாங்க யத்தனம் செய்தார். அது கூடிவரும் சமயத்தில் சரிப்படாமல் தவறிப்போய் விட்டது. வேறு வழி யொன்றும் தோன்றவில்லை. கலியாண அவசரம் பொறுக்கக்கூடியதாகவில்லை. ஆதலால் குடியிருக்கிற வீட்டை அடகுவைத்துக் கடன் வாங்கத் தீர்மானித்தார். இதை யெல்லாம் ஸுசிலதா கவனித்துக் கொண்டிருந்தாள்.

"அப்பா, குடியிருக்கிற வீட்டை அடைமானம் வைப்பது சரியல்ல, அது எனக்குச் சம்மதமில்லை."

"அம்மா! நான் வேறு விதமாகப் பணம் வாங்கலாமென்று பார்த்தேன்; அது முடிவதுபோல் காட்டிக் கடைசியில் மோசமாகப் போய் விட்டது. கலியாணத்துக்குப் பணம் வேண்டுமே, காலஹரணம் செய்யத்தக்கதாயில்லையே!"

"என் கல்யாணம் நின்று போகட்டும், குடியிருக்கிற வீட்டை அடகு வைப்பது கூடவே கூடாது!"

"அடைமானம் வைத்துத்தான் ஆகவேண்டியிருக்கிறது!"

"ஐயோ! அப்படிச்செய்தால் குடித்தனம் கலைந்து போய்விடுமே! கடன்காரன் உங்களையெல்லாம் சந்தியில் விட்டுவிடுவானே! அது கூடவே கூடாது!"

"நாளைக்கு என்ன வருகிறதோ! பார்த்துக் கொள்வோம்! இன்றைக்கு வீட்டை வைத்துத்தான் கடன் வாங்கியாக வேண்டும்."

இப்படிச் சொல்லுகையில் தகப்பனாருக்கு முகம் இறக்கம் கொண்டது. மனம் தளர்ந்தது. திடம் குறைந்தது. ஏக்கம் அதிகரித்தது.

இதை யெல்லாம் ஸுசிலதா பார்த்து மனம் புண்ணானாள். அவளுக்கானால் துக்கம் ஸஹிக்க முடியவில்லை. ஆனால் வேறு வழி யொன்றும் தோன்றவில்லை.

"எனக்கு விவாகம் வேண்டாம்" என்று சொன்னால் யார் கேட்பார்கள். அப்பொழுதும் தகப்பனாருக்கும் குடும்பத்துக்கும் நேரும் கஷ்டங்களுக்குச் சொல்லி முடியாது, இந்த தர்மசங்கடத்தில் அவள் குழந்தை-மனம் ஆடிக்காற்றுத் துரும்புபோல் அலைந்தது.

ஆனாலும் அவள் அலையுமனதையடக்கி தேவியைச் சிந்தித்து "உன் பாதமதே சரண" மென்று அவள் பாதாரவிந்தத்தில் மனதை யூன்றினாள். இந்த தர்மசங்கடத்தில் வேறு

என்ன செய்வதென்று அவளுக்குத் தோன்றவில்லை.

புருஷ சிங்கமும் மஹாதீரனுமான அர்ச்சுனனே தர்மசங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு மூர்ச்சித்துப் போனனென்றால், இளங்கொடி போலும் அக்குழந்தை என்ன செய்வாள்! தேவியினிடத்தில் பாரத்தைப்போட்டுவிட்டு அவள் விட்டவழி யென்றிருந்தாள்.

எண்ணினர்க்கெண்ணினபடி யிருந்தருளீயும் தேவி அவளுடைய குழந்தை-மனம் நொந்து சிந்தை செய்வதைக்கண்டு அருள் சுரந்து அவளுக்குப் பிரஸந்நமானாள்.

அர்ச்சுனன் தர்ம ஸங்கடத்தில் அகப்பட்டு மூர்ச்சித்துப் போன பொழுது பகவான் அவனுக்கு எத்தனையோ விதமாக ஆத்மோபதேசம் செய்தும் அவன் சந்தேகம் தெளியாமற்றானே "ஸ்வாமி நீங்கள் செய்யும் உபதேசமெல்லாம் எனக்கு மனதில் பட்டும் படாமல் இருக்கிறது. உங்களுடைய விபூதி மஹிமையை நான் நேரில் பார்க்கக் கடாக்ஷித்தருளல் வேண்டு மென்றான்.

அப்பொழுது பகவான் அவனுக்கு ஞானக்கண்ணைக்கொடுத்து விசுவரூபதரிசனமளித்தார். அதைப்பார்த்து அவன் பயந்துபோனான்.

அப்படிப்பட்ட மஹாதீரனுக்கும் சோகத்தை விளைத்த தர்மஸங்கடம் மற்றவர்களுக்குச் சோகத்தை விளைக்காமற் போகுமா?

அவன் பகவானுடைய விசுவரூபதரிசனம் கிடைக்கப்பெற்றும் பயந்து போனனென்றால் மற்றவர்களுக்கு அந்த உள்மைத்தரிசனம் இலகுவில் ஸித்திக்குமா? ஸித்தித்தாலும் மனது கலன்று போகாமலிருக்க முடியுமா? முடியாது! முடியாது!

ஸுசிலதா பச்சைப்பாலன். 15 - வயதுக் குழந்தை. உலகத்தின் கிருத்திரமங்களையும் அக்கிரமங்களையும் அறியாதவள். அன்பிலே பிறந்து அன்பிலே வளர்ந்து வந்தவள். அவளுக்கு "ஐயோதெய்வமே ஏன் இந்தத்தேஹம் எடுத்தோம்!" என்கிற ஒரு எண்ணமே மேலிட்டிருந்தது. இந்த தேஹத்தை விட்டு விட்டால் எல்லாத்துன்பமும் தீர்ந்து விடும் என்று அவள் உண்மையாய் நினைத்தாள். ஆனால் தேஹத்தை விடுவதெப்படி யென்று தான் அவள் குழந்தை-மனதுக்குத் தோன்றவில்லை.

சூடாலை பூர்வஜன்ம பக்குவத்தால் புருஷனோடு வாழ்ந்துகொண் டிருக்கையிலேயே ஞானயோகத்தால் ஆத்மஞானம் ஸித்திக்கப் பெற்றபோது அவளுடைய கணவனாகிய சிகித்துவஜராஜன் அவளிடத்துண்டாயிருக்கிற அபூர்வ அற்புத அழகையும் ஆத்மதேஜஸையும் கண்டு இந்த நூதன அழகு உனக்கு உண்டானதற்குக் காரணமென்ன வென்று கேட்டான். அதற்கவள் தான் ஆத்மாவையறிந்து அறிந்த அறிவழிந்து அறிவானந்தத்தில் மூழ்கியிருப்பதால் அது உள்ளும் புறமும் ததும்புகிறதென்று சொன்னாள். சொன்னாலும் அவனுக்கு அது ஏறவில்லை. பிறகு அனுபவத்தில் அவள் வேறுபட்டிருப்பதைப் பார்த்து தானும் வனம்சென்று தபஸியற்றி ஆத்ம ஞானம் பெற்று வருவேன் என்று இராஜ்யத்தைவிட்டுவிட்டு காட்டிற்கு ஓடிப்போய்விட்டான். அப்பொழுது அவ்வரசன் மனைவியாகிய சூடாலை அரசனில்லா இராஜ்யம் பாழ் என்றிருக்கிறபடியால் அவன் காட்டுக்குப்போனதைத் தெரிவிக்காமல், தானே ராஜவேஷம் தரித்து மந்திரிகளைக்கொண்டு இராஜ்ய காரியங்களை நடத்திவந்ததன்றி, சிகித்துவஜராஜனுக்கு கும்பமுனியாகத் தோன்றி ஆத்மோபதேசம் செய்து அவனைக் கடைத்தேற்றப் பார்த்தகதையை ஞானவாசிஷ்டத்தில் சவிஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறது.

இந்தக் கதை வசிஷ்டரால் சிறு பிள்ளையாகிய இராமனுக்குச் சொல்லப் பட்டிருப்பதால், இதைக் குழந்தைகள் வாசித் தறியவேண்டியது. குழந்தைகள் என்றால் குழந்தை-மனமுடையவர்கள் என்று அர்த்தம். குழந்தை-மனம் இல்லாதவர்களுக்கு அக்கதை யிலுள்ள இரகஸியங்கள் விளங்கவே மாட்டா வென்பது நிச்சயம்.

அனேக வருஷங்கள் தபஸியற்றியும்

சகலத்தியாகம் என்றால் இன்னதென்றுணரா மல், மலை மேலேறிக் கீழே விழ யத்தனித் தான் அரசன். அப்பொழுது அவனுடைய இஷ்ட தேவதையான சூடாலை கும்பமுனி யாக வந்து அவனைக் காப்பாற்றுகிறாள்.

"நானெனு மகந்தை தீர்த்தென் மதியுண்ட மதியான மதிவதன வல்லியே" என்றபடி நான் என்கிற பாவத்தை அறவிடுதலே ஸகலத் தியாகமாகும்.

ஸுசிலதா, தேவியைக் குறித்துச் சிந்தித் தாள். துர்க்கா தேவியும் அவளுக்குச் சோதி தரிசன மளித்து அபயம் கொடுத்தாள்.

தேவியோடு ஐக்கியமாக விரும்பினாள். அத ற்கு தேஹம் தான் இடையூறு யிருக்கிற தென்று தேஹத்தை விடத் துணிந்தாள்.

இந்த மட்டும் அவள் போனவழி யெல்லாம் சரியே! ஆனால் தேஹத்தை விடுவதெப்படி? யென்கிற ஆலோசனை தோன்றிய பொழுது மாயை வந்து அவள் புத்தியை மறைத்து விட்டது.

தீயினாலோ, ஜலத்தில் வீழ்ந்தோ அல்லது விஷத்தினாலோ பிராணனை விடவேண்டு மென்று, இம் மூன்று உபாயங்களில் எது தாழ்வில்லை யெனத் தெரிந்துகொள்ள வேண் டியது அவள் கடமையென்று நினைத்துவிட் டாள்.

இந்த தேஹத்தை விட்டு பலாத்காரமாக உயிர் பிரிந்தால் அதற்குள்ள தேஹாபிமானம் விட்டுப் போகாதென்று அவள் அறிந்தா ளில்லை.

வாசிவசம் செய்து பிராணனைக் கொண்டு மனதை யடக்கி (சித்த விருத்தியை நிரோதம் செய்து) அடங்கின மனதை ஒழிவில் ஒடுங்கச் செய்து "முப்பாழுக் கப்பாலுக் கப்பாலா யிருக் கும்" பரம்பொருளையறிந்து அஃதோடைக் கியமாகும் பரமரகஸியத்தை அவள் உணர்ந்தா ளில்லை.

ஏதோ குழந்தைப் புத்தியால் தான் கண்ட தரிசனத்தில் நம்பிக்கை வைத்து தீயினால் தன் தேஹத்தை மாய்த்துக் கொள்ளத் தீர் மானித்து விட்டாள்.

பெறற்கரிய பேறாகிய மானிட ஜன்மமெடுத் தும் சாகத் தெரியாமலே நாம் சங்கட்ப் படுகிறோ மென்பது உண்மை.

தேஹம் ஜடப்பொருள். அதனால் ஒன்றும் ஆகாது. அதை ஜட மென்றறிந்தால் அது அடங்கி விடும். தேஹத்திலிருந் தாட்டுவிக் கும் இந்திரியங்களும் அவற்றிற்கு மேலே யிருக்கும் கரணங்களும் சூக்ஷ்ம பூதங்களின் பரிணாமங்களாதலால் அவைகளுக்கும் தானாக அறியும் சக்தியில்லை. அறிவை யடுத்துப் பிழைக்கும் அறியாமை யென்னும் நிழல் போன்ற மாயாசக்தியின் அம்சங்களிவை. மனது சுக துக்கங்களை யனுபவித்துணர்வ தற்குச் சாதகமான ஒரு கருவியேயன்றி அதற்கு சுகதுக்க உணர்வு ஸ்வபாவமாக வில்லை. ஏனெனில் அதுவும் ஜடம். துவந்துவ பெந்தத்தால் வரும் ஒரு வில்லிங்கம் இது.

"மன மாயையே மாயை" யென்று திரு மூலர் ஓதியிருக்கிறார். "இம்மாயை மயக்க மனமாயை தான் மாளும்: மற்றொன்று மில்லை." இந்த மனது செய்யும் மாயாஜா லங்களையுணர்ந்து அறிந்துவிட்டால் சாட் டிவிட்ட பம்பரம்போல் மனம் ஆடி ஓய்ந்துவிடும். அந்த மனம் ஓய்ந்த விடத் தில் அலை யோய்ந்த சமுத்திரம்போல் எல்லாம் சாந்தோபசாந்தமாய் விளங்கும். அந்த சாந் தத்தில் சுகதுக்கம் என்கிற துவந்துவங்களுக் கிடமில்லை. அலையும் மனதாகிய மனப்பேய் தான் நம்மை பேய்க்கோலம் காண்கிறது. இந் தப்

"பேயைப்பெண்டு கொண்டு பேய்க்கோலந்தானகி
மாயை மயக்கால் மனமெல்லாம் புண்ணாகித்
தாயைத்தொழுதழுது துவந்துவமெலாமறப் போக்கிக்
காயைப் பழமாக்கும் கருணை யொடொன்றானேனே".

என்பது அனுபவ சித்தர்கள் உண்மை வாக்கு.

மனம் புண்ணாகித் தாயைத் தொழுதழுத ஸுசிலதா "துவந்த மெல்லாம் அறப்போக"த் தேடாமல் தன் பிதாவினிடத்துள்ள அபிமா

னத்தால் தன் தேஹத்தையே துறக்க நினைத்தாள். அதுவும் குழந்தை விளையாட்டாக முடிந்தது. தீயின் குணமறியாத குழந்தைகள் தீயை அண்டி சுடப்பெற்றுத் துன்புறுவது போல் மரணத்தின் ஸ்வபாவமறியாத ஸுசிலதா, மரணத்தைக்கோறி தேவியைச் சரணடைந்து போதை மயக்கத்தில் தான் செய்வதின்னதென்றறியாமல் சிறு பிள்ளை விளையாட்டாக கிரோஸின் எண்ணையை மேலே யூற்றிக்கொண்டு நெருப்புக் குச்சியையிழுத்து தீயிட்டுக் கொண்டு தேஹத்தை யொழித்துக் கொண்டாள். இதனால் அவள் துன்பமாவது அவளைப் பெற்றோர்களுடைய துன்பமாவது நீங்கிற்றென்பதில்லை. குழந்தைகளுக்கு விவேக ஞான முதிக்க விடாமல் அவர்களை மூடமாய் வளர்த்து வருவதால் வருங்கேடு இது. மனமாயையைக் கெடுத்து அலையுமனதை யடக்கினால் விசாரமெல்லாம் தானே முடிவு பெறும். "பிணையாய்வதில்லை . பிதற்றவும் வேண்டாம், தனையாய்ந்திருப்பது தத்துவம் தானே" யென்று திருமூலர் திருமந்திரோபதேசம் செய்திருக்கிறார்.

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை" யென்றார் பிறரும்.

உலகத்தில் அக்கிரமங்களும் அநியாயங்களும் எத்தனையோ நடந்துகொண்டுதானிருக்கும். அதையெல்லாம் திருத்த மனிதனால் முடியாது. ஆனால் தன்னைத் தானே திருத்திக் கொள்ள மனிதனால் ஆகும். தன்னைத் தானே திருத்திக்கொண்டு கடைத்தேறினால் எல்லாம் தன்வழிப்பட்டு வரும். இது தான் ஆத்மசக்தியின் வைபவம்.

---

## PURANAS : WHAT THEY TEACH.

## புராணங்கள்: அவற்றின்பிரயோஜனம்.

" இப்பிரபஞ்சமே துவந்துவ ஸ்வரூபமானது."—என்றால், எதுவும் இரண்டாகப் பிரிந்து ஒன்றுக்கொன்று நேரெதிராக நிற்கும் ஸ்வபாவமுள்ள மிதுனசக்தி ரூபங்களாலானது என்பது பொருளாம். நலம்-தீது ; இன்பம் துன்பம்; சுகம்-துக்கம்; பிறப்பு-இறப்பு ; விருத்தி-க்ஷயம்; உற்பத்தி - லயம்; பெந்தம்-மோக்ஷம்; ஆண்-பெண்; சீதளம்-உஷ்ணம்; ஒளி-இருள்; இப்படி வளர்த்திக்கொண்டுபோகலாம். இப்படி இரட்டை இரட்டையாக ஜோடி பிரியும் பொருள்களை உளவறிந்து ஊன்றிப் பார்த்தால் அவற்றின் ஸ்வபாவம் உண்மையில் உள்ளபடி இரண்டல்ல; ஆனால் ஏகவஸ்துவாயுள்ள ஒன்றின் இருமுனைகள் என்று தெரிய வரும். ஒரு குச்சியை யெடுத்தால் 'குச்சி' ஒன்றானாலும் அதன் முனைகள் இரண்டாகவே யிருக்கிறது. இந்த இரண்டு முனைகள் எல்லாவற்றிற்குமேயுண்டு. காணுதற் கரிதாம் காலத்திற்கும் இப்படிப்பட்ட முனைகளிரண்டுண்டு. அவை "ஆதி-அந்தம்"; தேச பரிச்சின்னமான இடத்துக்கும் "அடி-முடி" யென்றிரண்டுண்டு. வஸ்து பரிச்சேதமான வர்த்தமான விஷயங்களுக்கு "காரணம்—காரியம்" என இருவகை துவந்துவமுண்டு. இப்படி ஏகவஸ்துவாயிருந்தும் துவந்துவ ரூபமாய் விளங்கும் ஒன்றுக்கொன்றெதிரான மிதுனசக்திஎன்னும் "இணைபிரியா இரட்டை"ப்பிரிவுகளின் சக்திக்குட்பட்டு அவைகளின் தொழிலாய்விளங்கும். "இராகத்துவேஷம்" என்னும் "இழுப்பு-உதைப்பு"களுக்குட்பட்டு விளங்குவதாயிருப்பதெதுவோ அதுவே 'உலகம்' என்றும் 'ப்ரபஞ்சம்' என்றும் சொல்லப்படுவதாம். உலகத்தின் உட்பொருளையெடுத்து விள்க்கும்போது இந்த மிதுனசக்தியையே அதன்பல்கோடி வேறுபாடுகளிலும் விளங்கவெடுத்துச் சொல்லவேண்டியதாக முடிகிறது. தத்துவ விசாரம் செய்து தத்துவஞானம் பெற்று தத்துவ தரிசனம் காணாத கண்மூடி ஜனங்களுக்கு தத்துவங்களின் உண்மையை விளக்க வேண்டியபோது கருத்தறியமாட்டாக் குழந்தைகளுக்குக் கிரகிக்க வேண்டிய கருத்தமைந்த கட்டுக் கதைகளை 'உருவகப்படுத்தி'ச் சொல்லுந் தாய் போல், எல்லாமறிந்த இருஷிகள் தத்துவங்களை யோக மார்க்கத்தால் தீவிர முயற்சி செய்துணரமாட்டாதவர்களுக்குப் புராணங்களாக அமைத்து

வந்தனர். புராணமென்றால் "பொய்க்கதை" என்று அர்த்தமல்ல; இப்பிரபஞ்சமே நிலையற்றது, ஆகையால், "பொய்" என்கிற அர்த்தத்தில் புராணங்களும் ஆத்மாவொழிந்த மற்ற எல்லாமும் பொய்தான். ஆனால் பிரபஞ்சம் "ஸத்யம்" என்கிற பாவத்தில் புராணங்களும் ஸத்தியமே. காலாதீதமான உண்மைகளைக் கால தேசவரையரைக் குட்பட்டுச் சொல்ல வேண்டியபொழுதுபுலனறிவுக்குட்பட்டதைக் கொண்டே சொல்லவேண்டியதவசியமாகிறது. புலனறிவுக்கெட்டாதவொன்றைப் புலனறிவுக் குட்பட்டதொன்றால் எப்படிச் சொல்கிறது என்றால்,—அளவுக்கடங்காத ஒன்றை அளவுக் குட்படுத்திச் சொல்வது போலே சொல்லல் வேண்டும். உழக்குப் பாத்திரத்துக்குமேலே பெரிதான ஒரு அளவையறியாதவனுக்கு சமுத்திர ஜலத்தை உழக்காலளந்து சொல்லவேண்டுமென்றால், உழக்கு, ஜலம், காலம், (அவன் உயிர் அல்லது ஜீவகாலம்) இவைகளைச்சேர்த்து "அப்பா இந்த உழக்கால் அளந்துகொண்டே போனாயானால் நீ, உன்பிள்ளை, பேரன் கொட்பேரன், என்று இப்படி 1008த் தலைமுறையானதும் சமுத்திரத்தை யளக்கு முன் வேலை முடியும்" என்று சொல்லவேண்டிவரும். சமுத்திர ஜலம் அளவற்றது என்று சொல்லுவதற்கு பதிலாக, அவனைத் தன் தலைமுறை வழியாக அளவற்ற காலமிருக்கச்செய்து அந்த அளவின்மையை அவனுக்குணர்த்த வேண்டியது. சமுத்திர ஜலத்துக்கும் தனக்குமுள்ள சம்பந்தத்தை யுணரமாட்டாத பேதையாதலால், அதற்கும் அவனுக்கும் ஒரு சம்பந்தத்தை(அந்த ஜலத்தை அவன் விடாது அளந்து கொண்டிருக்கிறான் என்கிற வியாஜத்தால்) உண்டுபண்ணி, அவனுடைய காலத்தை அவனது சந்ததி வழியாக அளவற்றதாக நீடிக்கச் செய்து, ஒன்றின் அளவற்ற தன்மையை, அவனறிவுக்குச் சம்பந்தப்பட்ட ஒரு அளவற்ற தன்மையைச் சிருஷ்டித்து அதனாலுணர்த்த வெண்டியதாகிறது. இவ்வளவு சொல்லியும் 'அளவற்றதன்மை' இன்னதென்று உள்ளபடி யவனுணர்ந்தானில்லை. அளவற்ற தன்மை 'அளவு' ரூபமாம் காலங்கடந்து காலாதீதமான நிலையிலே யுணரத்தக்கது. காலங் கடந்துபோகும் சக்தி யவனுக்கில்லை ; ஆதலால் காலத்தை வளர்த்தி அவன் மனம் குவிந்து விரிந்து மேன்மேலும் வளரச்செய்வதற்கு வேண்டிய ஒரு உபாயத்தைச் செய்து. அதையவன் நம்பும்படியாகச் சொல்லி முடிக்கிறோம். இது வெறும் பொய்யாமோ ? ஆகாது ! இப்படிச் சொல்லாது, அப்பா ஐம்புலனுமடங்க அடக்கினால் அப்பாலே யுண்மை யறியலாமென்று யோகபாத்திரனல்லாதவனுக்கு யோகவழியைச் சொன்னால் அவன்வீணே கெட்டுப்போவான். எனெனில் ஐம்புலனுமடங்கியவிடத்து அறியாமைவந்து மூடிக்கொள்ளும். அப்பொழுது அவன்கதி முன்னிலும் கேடுகெட்டதாகப் போய்விடும். "வர வர மாமியார் கழுதைபோலானாளாம்" என்கிற கதையாக சேதன ரூபமெடுத்து (அறிவுள்ள ஜந்துவாகப் பிறந்து) யோகஞ் செய்யப்போய் அசேதனமாகப் (அறிவற்ற ஜடமாக) போவான். இந்த வுண்மையின் உள்மர்மத்தை திருமூலர் பின்வரும் திருமந்திரத்தில் உபதேசிக்கிறார்:—

"அஞ்சுமடக் கடக்கென்பரறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரு மங்கில்லை;
அஞ்சு மடக்கில் அசேதனமா மென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவறிந்தேனே."

"அஞ்சுமடக்கா அறிவு" என்றால் என்ன வெனில், ஔவையார் சொல்கிறார் கேண்மின்:—

"அஞ்சு மடக்கி யறிவோடிருந்தபின்
துஞ்சுவதில்லை யுடம்பு."

அதாவது, பஞ்சேந்திரியங்கள் "அஞ்சு மடக்க" அறியாமை வந்து மூடும்; இதைச் 'சூனியகாலம்" என்கிறார். "சூனியகாலம்" என்றும், "பாழ்" என்றும், "மாயை" என்றும், "இருள்" என்றும் "அஞ்ஞானம்" என்றும் சொல்லும் இந்தத் தத்துவத்தை அறிவாலறிந்து இதுவுந் தாண்டியுள்ள "அருள்வெளியிலிருத்தலாம்'

"சிவயோக" நிலையில் "அறிவோடிருந்தபின்" "துஞ்சுவதில்லை யுடம்பு"—யோகிக்கு நித்ரை யற்ற நிலையாம் "சதாவிழிப்பு" அல்லது "துரிய நிலை" வித்திக்கின்றது. "தூங்காமற்றூங்கும்" துரியநிலையிலிருந்து முதிர்ந்தால் "அஞ்சுமடக்கா அறிவழிந்திருத்தலாம்" சகஜநிலை சித்திக்கிறது. ஆகையால், யோகமார்க்க சாதன உண்மைகளையும், புராண விசேஷங்களையும் ஒன்றுகக்கட்டிக் கலந்து போதித்தல் சரியல்லவென்பது பெரியோர் கொள்கையாக விருக்கிறது. அக்கொள்கையை யனுசரித்து நடத்தலே யுத்தமமாம். புராணம் சிரவணமனனத்துக்குச் சாதனமாக வேற்பட்டது. பக்தியால் நம்பி சிரவணமனனம் செய்து வருகிறவர்கள் கமலாம்பாளைப்போல் பக்தி மிகுதியால் சகுணோபாசனை பலித்து குருதரிசன முண்டாக அதன்மேல் குருவழிப்பட்டுய்யலாம்.

---

## VILLAGE LIFE AND ECONOMICS.
## A PEN-PICTURE.

### கிராம வாசம்.

### ஸமஷ்டி வாழ்க்கையும் செல்வச்செட்டும்.

பீடிகை.

சென்னையில் ஜனங்களுடைய ஸமுதாய வாழ்க்கை, செல்வச் செட்டு, குடித்தனப் பாங்கு முதலிய விவரங்களைப் பற்றி விசாரித்து உண்மையறிந்து கொள்வதற்காகவென்று ஒரு சங்கம் ஏற்பட்டிருக்கிறது அது ஸ்தாபனமாய் ஒரு வருஷமாகிறது. அந்தச் சங்கத்தார் முயற்சியில் கனம் ஸர்ஹாரல்டு ஸ்டுவேர்ட் அவர்களும் மற்ற பிரமுகர்களும் அதிக சிரத்தையெடுத்துக் கொண்டு வருகிறார்கள். நவநாகரிகம் மலிந்த இக்காலத்தில் பட்டணவாசம் உயர்ந்து கிராமவாஸம் தாழ்ந்துவருகிறது ஏனெனில் நல்லாரும்பொல்லாரும் கிராமத்தை விட்டுப் பட்டணவாசத்தையே நாடிவருகிறார்கள். இதற்குக்காரணம் என்னவெனில் பட்டணவாசத்தின் நவநாகரிகமினுக்குநல்லாரையும் பொல்லாரையும் நயந்திழுப்பதா யிருக்கிறது. கனம் ஸர் சங்கரன் நாயர் அவர்கள் கிராமசீர்திருத்தத்தைப் பற்றி (Modern Review)கல்கத்தாவில் பிரசுரமாகும் 'மாடர்ன் ரிவியூ' என்னும் மாதாந்தப் பத்திரிகையில் ஒரு வியாஸம் எழுதியிருக்கிறார். அதில் கிராமவாசம் வர வரச் சீர்குலைந்து வருகிறதென்பதை நன்றாக விஸ்தாரப்படுத்தி யெழுதியிருக்கிறார். ஏன்? என்றால் அதற்குக்காரணம் கிராம வாசத்துக்கு வேண்டிய படிப்பு இல்லாமையே என்று சொல்லுகிறார். அவருடைய கருத்து என்னவென்றால்:—

முன்காலத்தில் கிராம வாசம் அதன்மட்டில் ஸம்பூரணமாயிருந்தது. அதாவது ஜனவாசத்துக்கு வேண்டிய ஸௌகரியங்கள் எல்லாம் அமைந்திருந்ததோடு கிராம ஸமுதாயச் செட்டும், கிராமத்தின் ஸமஷ்டி வாழ்க்கையும் மனிதனுடைய இகபர வாழ்க்கை யிரண்டுக்கும் போதுமான ஸௌகரிய ஸந்தர்ப்பங்களை யளிப்பதா யிருந்தது. (Village life formerly was complete and self-contained.) இப்படி ஸம்பூர்ணமாயும் தன்னியோகமாயுமிருந்த கிராம வாழ்க்கை இப்பொழுது குறையும் சிறையுமா யிருப்பதேன். இதற்கெல்லாம் காரணம் தற்காலத்திய வித்யா போதன முறையும் பள்ளிக்கூட ஏற்பாடுமே யென்று சொல்கிறார் ஸர் ஸங்கரன் நாயர். இவருடைய அபிப்பிராயத்தைச் சற்று விசாரித்து விளங்கவைப்போம்.

### Village-Education (Nature-Study).

### நாட்டுப்படிப்பு (பிரகிருதி வித்தை.)

முதலாவது நல்லாரும் பொல்லாரும் பட்டணவாசம் புகுவதற்குக் காரணம் இப்பொழுது பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்கும் படிப்பு பட்டணவாசத்துக்கு வேண்டிய படிப்பாகவே யிருக்கிறதன்றி கிராம வாசத்துக்கு வேண்டியதாகவில்லை. கிராமாந்திர பள்ளிக்கூடங்களில் ஏட்டுப்படிப்பு மிகுந்து இயற்கைப் படிப்பு குறைந்து விட்டது. முன்காலத்தில் அப்படியில்லை. கிராமாந்திரங்களில் சொல்லிக்

கொடுக்கும் படிப்பு கிராமவாசத்துக்கு வேண்டியதும் ஏற்றதுமாக விருந்தது. கிராமவாசத்துக்கு வேண்டிய படிப்பு இயற்கைப்படிப்புத்தான் (Nature Study). இயற்கைப் படிப்பு என்று சொன்னதையே பிரகிருதிவித்தை யென்றும்சொல்லுவர். "பிரகிருதியின் உண்மையில் பரமனைக் காணலாம்" என்பது ஆன்றோர் வாக்கு அதாவது மூத்தோர்சொல் மூத்தோர் என்றால் அறிவில் முதிர்ந்தவர் என்று அருத்தம். இப்பொழுது அந்தவித்தைக்குக் குறைவு வந்துவிட்டது. கிராமத்தில் வசிக்கிறவர்கள் பிரகிருதி ஸ்வபாவ மறிந்தவர்களாக விருந்தால்தான் பிழைக்கலாம், பிரகிருதி ஸ்வபாவ மறியாதவர்களுக்கு கிராமத்தில் பிழைப்பில்லை. குருடனுக்குச் சூரிய வெளிச்சத்தால் பிரயோசனமில்லைப்போல், பிரகிருதி ஞானம் இல்லாதவர்களுக்கு கிராமவாசம் பிரயோசனப்படாது. "ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது" என்று கேட்டதில்லையா!

**The Needs of Town Life (Book-Lore).**

பட்டணப் படிப்பு-ஏட்டுப்படிப்பு.

பட்டணவாசிகளுக்கு வேண்டிய படிப்பு வேறுவிதமாயிருக்கிறது. அதையெல்லாம் ஏட்டுப்படிப்பு என்று ஒரு வார்த்தையில் சொன்னோம். அதை உதாஹரணப்படுத்திச் சொல்ல வேண்டுமானால் மார்ஸ்டன் துரை நமது குழந்தைகளுக்கெழுதிய முதற்பாட புஸ்தகத்தில் ஒரு வசனம் ஞாபகத்திலிருக்கிறது: அது பட்டணம் படிப்பு முழுவதையும் குறிக்கும். "அக்கா அப்பம்தா." Bread and Butter Education அப்புஸ்தகத்தைப் படித்த குழந்தைகள் "அக்கா அப்பம் தா" என்று சொல்லக் கற்றுக்கொண்டது. பட்டணப்படிப்புக்கு உதாஹரணமா யிருந்தது. பட்டணப் படிப்பு எல்லாம் ஏட்டுப்படிப்பும் சோற்றுப் படிப்புமா யிருக்கிறது. வாஸ்தவமென்பதை உள்ளுணர்வுடையவர்க ளெல்லாரும் ஒப்புக்கொள்ளவேண்டும். இங்கிலீஷ் படிப்புப் படிக்காத ஒருவர் நாட்டுப் படிப்புப் படித்ததைக் கொண்டு பட்டணம் வந்து பெரிய மனுஷர்களை யடுத்து அவர்களுக்கு ஹிதமான சேவை செய்து, சுமார் 10 ஆயிரம் ரூபாய் சேர்த்து விட்டார். அவர் பணத்தை வட்டிக்கிட்டு வந்தார். ஆர்பத்நட் முழுகினதும் லாவாதேவி (பணம் கொடுக்கல் வாங்கல்) வியாபாரத்திலுண்டான பித்தலாட்டத்தைக் கண்டு தான் அரும்பாடு பட்டுத் தேடிய பணத்தை வட்டிக்குக்கொடுத்து முதலுக்கேமோசம்வரப்பார்க்க இஷ்டமில்லை. அவர் சமயம் பார்த்து தோட்டம் துறவுகள் வாங்கி நிலத்தில் போட யத்தனித்தார். முதலில் ஒரு மணற் காட்டைச் சொற்ப விலை கொடுத்து வாங்கினார். இங்கிலீஷ் படித்தவர்கள் அவரைப் பரிகாசம் செய்தார்கள். இப்பொழுது அந்த மணற்காடு சவுக்குமரத்தோப்பாகவிருக்கிறது. அவர்செலவிட்ட தொகையை விட இரட்டிப்பு மடங்கு விலை பெறுமானதாக விருக்கிறது. இன்னொருவர் நாட்டுப்படிப்புப் படித்தவர் ஒரு தோட்டத்தை விலைக்கு வாங்கினார். அது விலை கிராக்கியாகவிருந்ததால் போட்ட தொகைக்குச் சரியானவருமானம் கொடுக்கவில்லை. நிலம் பஞ்சையாகவிருந்ததால் நிலத்தைச் சீர்படுத்தினால் பணம் வரும் என்று நினைப்பதற்கில்லை. ஆனால் அது ஊருக்கு அடுத்ததாகவிருந்தால், அந்தத் தோட்டத்தை வீடு கட்டுவதற்கான மனைகளாக உபயோகிக்கக் கருதி முன்புறத்தில் இரண்டு வீடு கட்டிவிட்டார். இப்பொழுது அங்கே நிலம் கிராக்கியாகிவிட்டது. இங்கிலீஷ் படித்த ஒருவர் அவருடைய சாமர்த்தியத்தைக் கண்டு சிலாகித்துப் பேசினார். இங்கிலீஷ் படிப்புப் படித்து உத்யோகம் செய்து குவியல் குவியலாகப் பணம் சேகரித்தவர்களெல்லாம் பொட்டை வெளி நிலத்துக்கு ஒன்றுக்கு மூன்றாக விலை கொடுத்து அதில் இரண்டு பங்கு பணம் செலவிட்டு அதைமேட்டுபாங்காக்கி பெங்களா கட்டிவர, நீர் நிலத்துக்கு அதிகபணம் கொடுக்காமல் உடனே செட்டாகவும் சிக்கனமாகவும் பணத்தைச் செலவு செய்து லாபமெடுப்பது

மெச்சத்தக்கதாக விருக்கிறது என்று சொன்ஞர். அதற்கு அவர் "இங்கிலீஷ் படிப்பு என்னத்திற்கு பிரயோஜனம்? இங்கிலீஷ் படிப்பு வெறும் சோற்றுப்படிப்பு-வயிற்றுப்படிப்பு!" என்று உதட்டைப் பிதுக்கிக்கொண்டு கேவலம் இழிவாகப் பேசினர். அவர் சொன்னது உறுத்தினுலும் உண்மையென்று மற்றவர் ஒப்புக்கொள்ளவேண்டியதா யிருக்கிறது. பட்டணம் படிப்புக்கும் நாட்டுப் படிப்புக்குமுள்ள வித்தியாஸம் இதுதான். நாட்டுப் படிப்பு நல்ல கறிக்குதவும் மேட்டுச்சுரைக்காய்; பட்டணம் படிப்பு ஏட்டுச்சுரைக்காய், ஏட்டுச்சுரைக்காய்க்கும் மேட்டுச் சுரைக்காய்க்கு முள்ள வித்தியாஸம் என்ன தெரியுமோ இல்லையோ? ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாவது; மேட்டுச்சுரைக்காய்கறி சமைத்துச் சாப்பிட உதவும். நாட்டுப் படிப்பு ஜீவனேபாயத்துக் கேற்றது. பட்டணம் படிப்பு பேனப்பிடித்துக் கிறுக்கத்தான் உதவும். இராய்ஸம் செய்ய உதவும் படிப்பு காரியத்துக்கு உதவாமலிருப்பது. ஏன்? இதை யெழுதும் நாம், இப்பொழுது 29-வருஷகாலமாகப் பத்திரிகைக் கெழுதி யெழுதிக் கைதேயப் பெற்ருேம். நேற்றுவந்து அச்சுக்கோற்கும்பையன் அவன் அச்சுக்கோற்பதுபோலவே முத்துமுத்தாய் எழுதினுலன்றிஎழுத்துப்பிரதியைப்பார்த்து அச்சுக்கோற்கத் தன்ஞல் முடியாது என்று சொல்லி விட்டான். அச்சாபீஸ் மானேஜரும் பத்திராசிரியரை நிறுத்தி யெழுதக்கேட்டுக்கொண்டாரே யன்றி அவருடைய வேலையாளை வாசிக்கத் தெரியாதவனென்று கண்டிக்க சாத்தியப்படாதவராயிருந்தார். கண்டித்திருந்தால் வேலைக்காரன் வேலையைவிட்டுப் போவானேயன்றி சிரமமெடுத்து வாசிக்கக் கற்றுக்கொள்வான் என்பது சந்தேகம்தான். பட்டணவாசத்தின்மஹிமை அப்பேர்ப்பட்டது. எல்லாம் மருட்டியுருட்டிக் காசுபறித்துப்பிழைப்பதாயிருக்கிறது. கிராமவாசத்தில் பிழைப்பவர்கள் பிரகிரதியோடு பழகிப்பிழைக்கவேண்டியிருப்பதால், மருட்டலும் உருட்டலும் அங்கே சாயாது. பூமியின் சாரமும் காலசுபாவமுமறிந்து பாடுபட்டுழைத்தால் தான் அது பலனைக்கொடுக்கும். அதுவும் வான்மாரி பெய்யாதேல் பூஜ்யமாகும். ஆகையால் கிராமவாசம் செய்வோர்க்கு உழைப்பும் பொறுப்பும் இன்றியமையாதகுணங்களாம் இந்த குணமுதலின்றி பாடுபடுபவன் தேடியுண்பது கஷ்டமாகும். உழைப்புள்ளவர்கள் பட்டினிகிடக்கநேரிடாது. ஏனெனில் எல்லா மறிந்து படியளிப்பவன் அவரை மறந்துவிட மாட்டான்.

"முயற்சி திருவினையாக்கும்" "பொறுப்புள்ளார் பூமியாள்வார்" இப்படியாகக் கிராமவாசமும் நாட்டுப் படிப்பும் குணத்தையும் மனத்தையும் கொடுக்கும். இதற்கெதிரிடையாக பட்டணவாசமும் ஏட்டுப்படிப்பும் பொய், புரட்டு, பித்தலாட்டங்களுக் கெல்லாம் காரணபூதமாயிருக்கிறது. ஆதலால் தான் "கெட்டவன் பட்டணம் சேர்" என்கிற பழமொழியுண்டானது. பட்டணவாசத்திலுள்ளசிலாக்கியமெல்லாம் மேல் மினுக்கன்றி உள்சரக்கு ஒன்றுமில்லை. உள்சரக்கோடு (Character) மேல் மினுக்கும் (Finish) சேர்ந்தால் "பொன் மலர் நாற்ற முடைத்து" என்று கவி சொன்னதற்கு சமானமாம். பொன்மலர்க்கு வாசனை யுண்டாவது எவ்வளவு அருமையும் அசாத்தியமுமோ அவ்வளவு அருமையும் அசாத்தியமுமாகும் பட்டணவாசத்தால் மட்டும் முன்னுக்கு வருவது. பணம் சேர்த்தவரெல்லாம் முன்னுக்கு வந்தவராகார். பணமில்லாதவரெல்லாம் ஜீவயாத்திரையில் பின்னுக்கு வாங்கினவருமாகார். ஏனெனில் குணமில்லாத பணம் பிரயோஜனப்படாது. பணமில்லாத குணம் பிரயோஜனப்படும். ஏனெனில் அதற்கு நினைத்தது முடிக்கும் ஆற்றலுண்டு.

---

## THE DEPLETION OF VILLAGE LIFE.
## நாட்டுப்புறத்தின் சீர்கேடு.

நகரச்சிறப்பு, நாட்டுச் சிறப்பு என்று தேசத்துக்கு இரு சிறப்புண்டு; இவ்விரண்டும் உயிரும் உடலும்போல் இணைபிரியாதவையாம். நிலவளம், நீர்வளமிரண்டும் போல் நாட்டு ஜனங்க

ளும் நகரமாக்களும் ஒருவரை யொருவர் அடுத்து ஜனவிர்த்திக்கும் ஜனக்ஷேமத்துக்கும் இன்றியமையாத அங்கங்களாக விருக்கிறார்கள். நாட்டுப் புறவாசிகளெல்லாரும் பட்டண வாசம் செய்தே பிழைக்க வேண்டு மென்று வந்துவிட்டால், நாட்டுச்சிறப்புக் குறைந்துவிடு மென்பதிற் சந்தேக மில்லை. ஏனெனில் சுக ஜீவனம் கஷ்ட ஜீவனம் இரண்டும் பட்டண வாசத்தில் தான் ஸாத்தியம் என்கிற தப்பெண்ணம் ஜனங்கள் மனதில் ஏற்பட்டு வேரூன்றி விடுகிறது. படித்துத் தேறி உத்யோகத்தை நாடியுள்ளவர்கள் தான் பட்டண வாசம் புகுகிறார்கள் என்றால், படித்துத் தேறாமல் ஏதோ புத்தி சாமர்த்தியம் வாய்ந்து தத்தாரிகளாகத் திரிகிறவர்களும் கிராம வாஸங்களில் பிழைக்க வழியின்றி பட்டணம் வந்து சேருகிறார்கள். இவர்களைப் பார்த்து திடகாத்திரர்களால் வேலை செய்து பிழைக்கத் தக்கவர்களும் பட்டண வாசம் புகுகிறார்கள். இப்படியாக பலசாலிகளும், திடசாலிகளும், புத்திசாலிகளும் பட்டணத்தைநோக்கிச் சென்றுவிட்டால் பலஹீனர்களும், திடஹீனர்களும் புத்திஹீனர்களும் திக்கற்றவர்கள் போக்கற்றவர்களும் தான் கிராமத்தில் தங்குகிறவர்களாகிறார்கள். இவர்களுக்கு அன்றாட ஜீவனம் செய்வதே கஷ்ட சாத்திய மாயிருப்பதோடு சோம்பற்றனமும் சாமர்த்திய மின்மையும் சேர்வதால், ஏகாதசியும் துவாதசியுமாயிருந்து வேறு உயர்பாவ மின்றி எப்படியோ வயிறு வளர்த்து வருகிறார்கள்.

ஏகாதசியும் துவாதசியும் என்றால், சோறகப்படாவிட்டாற் பட்டினி கிடக்கிறதும், இலவசமாகச் சோறு கிடைத்தால் வயிற்றை நிறப்பிக்கொண்டும் வியவஸ்தையின்றி வயிறு வளர்த்து வருவதாம். இப்படிப்பட்ட வர்கள் பட்டண வாசத்தில் கேள்வி முறையின்றிச் சாகவேண்டி வரும். கிராம வாசத்தில் இவர்கள் அரை குறையாகத் தின்று எப்படியோ உயிர்தரித்து நடைப்பிணங்களாகவிருந்து வருகிறார்கள். இவர்களால் கிராம ஸமஷ்டி வாழ்வு முன்னுக்கு வருவது எப்படி? இவர்கள் ஒத்து வாழ்வது எப்படி? ஒவ்வொருவனும் வயிற்றுப் பாட்டுக்கே திண்டாட்ட மாயிருக்கும்பொழுது ஒத்துவாழ்வது எப்படி? "தனி மரம் தோப்பாமா?" என்பது கிராமத்தார் பழமொழி. ஒவ்வொருவனும் தன் பாடு தன்னோடே யென்று வசித்து வந்தால் ஸமஷ்டிவாழ்க்கை யென்பதற்கே யிடமின்றிப் போய் விடுகிறதல்லவா? பட்டண வாஸத்திலும் அவனவன் பாடு அவனோடே யென்றிருந்தாலும் அங்கே ஸமஷ்டி வாழ்வு ஸ்திரமா யேற்பட்டிருப்பதால் அதற்குட்பட்டே யெல்லாரும் ஜீவிக்க வேண்டும். வீட்டில் வசிக்கவேண்டுமானால் வீட்டுவரி, விளக்குவரி, ரோட்டுவரி, தண்ணீர்வரி முதலிய இத்தனை வரிகளுக்கும் இன்னும் எத்தனையோ ஸமஷ்டி சாதனங்களுக்கும் சகாயமாயிருந்துழைக்க வேண்டும். அப்படி சகாயம் செய்ய முடியாதவனுக்கு பட்டணவாசத்தில் சிறப்புமில்லை இருப்புமில்லை. பிச்சைக்காரனானாலும் ஒருவித கட்டுக்குட்பட்டுத்தான் வசிக்க வேண்டும் ஆனால் கிராமவாஸங்களிலிருந்து கற்றுத்தேறி நாணய ஜிவனார்த்தம் பட்டணம் வந்து சேருகிறவர்களைவிட "கெட்டவன் பட்டணம் சேர் என்ற முதமொழிப்படி, நாட்டுப்புறத்தில் ஜீவனம் கெட்டு பட்டணவாசத்தில் போய் முயற்சித்துப் பார்த்தாலன்றி வேறு ஜீவன வழியற்றவர்கள் எத்தனையோ பேர்கள் பட்டணம் புகுந்து விடுகிறார்கள். இவர்களால் "பட்டணம் போக்கிலிகள்" தொகை யதிகமாய் விடுகிறது, "போக்கிலி" "சாக்கிலி" அதிகமாகவே பட்டணவாச ஜீவனமும் நாணயம் குறைந்து போகிறது, மருட்டலும், உருட்டலும், பொய், புரட்டு, பித்தலாட்டங்களும், மலியவே நாணய ஜீவனம் செய்து பிழைப்பவர்களும் இந்த வித்தை யெல்லாம் கொஞ்சம் கற்றுக்கொள்கிறார்கள். இல்லாவிட்டால் அவர்கள் ஏமாந்து போக வேண்டியது தான். ஆகையால் 'களவும் கற்று

மற வென்ற வசனப்படி போக்கிலி சகவாசம் இவர்களுக்கு இன்றியமையாத்தாகி விடுகிறது. பட்டணவாசம் செய்து ஸகவாஸ தோஷத்தால் கெட்டுப் போகாமல் தேறுகிறவன் விசேஷ குணமும் மணமும் உள்ளவனுகவே யிருக்க வேண்டும். இப்படிப்பட்ட குணசீலர்களால் தான் பட்டணவாசம் சிறப்புறுகிறது. இவர்கள் தான் நகரச்சிறப்புக்குக் காரணமாயிருக்கிறார் கள். இப்படிப்பட்டவர்கள் எங்கிருந்தாலும் அங்கே ஜனசமூகத்துக்கு இவர்களால் மதிப் புண்டாகுமே தவிர குறைவுண்டாகமாட்டாது. ஆனல் கிராமவாசங்களின் சீர் கேட்டால் இவர்கள் குணமும் மணமும் அங்கு சோபிக்க ஹேதுவின்றிப் போகிறது. உயிருள்ள விடத் தில் குணமும் மணமும் சோபிக்குமே யன்றி உயிரற்ற விடத்தில் சோபிக்காது. நாட்டுப்புற வாசப் ஸமஷ்டிஜீவ-களை யற்று நலங்குலைந் திருக்கிற தென்று எடுத்துக்காட்டியுள்ளோம். இந்நாட்டுப்புறச் சீர்கேடு திருத்தப்படாவிட் டால் தேச க்ஷேமத்துக்கே குறைவு வருமென் பது நிச்சயம், இதை விவேகிகள் உணர்ந்து சீர்திருத்தவேண்டும், கனம் ஸர் ஹாரல்டு ஸ்டூவர்ட் முதலான பிரமுகர்கள் இதுவிஷயத் தில் உண்மையுணர்ந்தவரால் கிராமவாசிகளு டைய ஸமஷ்டி வாழ்க்கை, செல்வச்செட்டு இவைகளைப்பற்றிய விவரம் சேகரிக்கத்தலைப் பட்டிருப்பது நல்ல காலத்துக் கடையாள மாம்.

---

## THE ECONOMIC SURVEY OF VILLAGE LIFE.

### கிராமவாசச் செட்டு.

கிராமவாசம் என்பது கிராமத்திலுள்ளவர் களுடைய ஸமுதாய வாழ்வைக் குறிக்கும். இதுவே அந்த கிராமத்திற்குப்பொதுஜனவாழ் வாகும். இப்படிப்பட்ட கிராமத்தின் பொது ஜன வாழ்க்கையைப்பற்றி சென்னையில் ஸ்தா பகமாயிருக்கும் "இகானமிக் அஸ்ஸோஸி யேஷன் சங்கத்து மெம்பர்களில் ஒருவர் ஒரு வியாஸம் எழுதி வாசித்தார். அதிலிருந்து பொதுவான சில விஷயங்களை யெடுத்துக்கீழே வரைகிறோம் *

அவர்கிராமாவாசச்செட்டைவிசாரிக்க வெடு த்துக் கொண்ட கிராமத்தின் பேர் வன்னியம் பாக்கம். அங்கேயுள்ள வீடுகளின் மொத்தம் 142. ஜனத்தொகை 1174. பன்னிரண்டு வீடு களைத் தவிர மற்றவையெல்லாம் மண்சுவரெ டுத்துக் கூறை வேய்ந்துள்ளன. செங்கல்லி னல் கட்டப்பட்ட 12-வீடுகளும் புராதனமா யுள்ளவை. சென்றபத்து வருஷங்களில் ஒரு வீடாவது செங்கல்லினல் கட்டப்படவில்லை. கிராமத்தார்களில் பெரும்பான்மையார் வன் னியஜாதியார் அல்லது பள்ளிகள்; மிகச் செல் வாக்குள்ளவர்கள் ரெட்டிஜாதியார். இவர்கள் நிலம் வைத்தாள்கிறபடியாலும், கிராம நாட் டாமை இவர்களில் ஒருவர் வசமே யிருந்து வந்ததாலும், வித்தையில் மற்றவர்களைவிடத் தேர்ந்தவர்களாயிருந்து வருவதாலும் இவர் களுக்குச் செல்வாக்கு அதிகம். இப்பொழுது இவர்கள் செல்வாக்குக் குறைந்து வருகிறது. காரணமென்ன வென்றால் சமபாவம் கிராமத் தாரிடத் துண்டாய் வருவதால் என்கிறார். இந்த கிராமத்திலுள்ள மற்ற ஜாதியார்கள்:—பிராம ணர்கள், கைக்களவர், செட்டிமார், கம்மாளர், அம்பட்டர், வண்ணர், இவர்கள். ஒரே ஒரு மகம்மதிய குடும்பம் தான் அந்த கிராமத்தி லிருக்கிறது. பறைச்சேரி, கிராமத்திலுள்ள குன்றிற்கு அப்பால் எட்டியிருக்கிறது, அங்கே சுமார் 15-குடிசைகளிருக்கும்.

கிராமவாசிகளின் முக்கியத் தொழில் வியவ சாயம். கிராமவாசிகள் ஒவ்வொருவருக்கும் ஏதோ கொஞ்சம் நிலம் இருக்கிறது. கரும் புக்காலங்களில் ஏழைகள் தங்கள் நிலத்தை அடகுவைத்துக் கடன் வாங்கிப் பிழைக்க வேண்டியதாயிற்று. நிலவளம் ஒருதரப் பட்ட தாயில்லை. ஒருபாகத்தில் முதல்தர நஞ்சை

---

* Being the substance of a paper read at a meeting of the Madras Economic Association under the Presidency of the Hon'ble Sir Harold Stuart, I. C. S., K. C. V. O., C.S.I.

நிலம் 35-40 கலம் கண்டால், மற்றொரு பாகத்தில் முதல் தர நஞ்சை 30 அல்லது 33 கலம் தான் காணும். நெல் விளை நஞ்சையில் தானே குடிகள் கிணற்றுப்பாய்ச்சல் நீர் கொண்டு 'ராகி' சாகுபடி செய்கிறார்கள்.

நஞ்சை புஞ்சை விவரம்:—அந்த கிராமத்தி லுள்ள நஞ்சை நிலம் மொத்தம் 116 ஏகரா சொச்சம். இதில் 111 ஏகரா சொச்சம் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது. புஞ்சைநிலம் 630 ஏகராவில் 518 ஏகரா பயிர் செய்யப்பட்டு வருகிறது. தரிசாய்க் கிடக்கும் நிலம் கிராம மொத்துக்கு 90 ஏகரா.

பயிர் செய்யும் முறை:—மாட்டுச்சாணம், நிலக்கடலைப்புண்ணாக்கு பச்சைத்தழை இவைகளை எருவாக உபயோகிக்கிறார்கள். பச்சைத்தழை எரு வடிக்க இப்பொழுது அகப்படுகிற தில்லை. முன்னம் தழையெரு விலையின்றி அகப்பட்டு வந்தது. இப்பொழுது அந்தக்காலம் போய்விட்டது. வேறு எரு வேண்டியிருந்தால் சென்னைக் கெழுதிக் தருவித்துக்கொள்ளுகிறார்கள். கடலைப்புண்ணாக்கு ஒரு ஏகராவுக்கு 32 ரூபாய் பெறுமான அளவு போட்டால் தான் உறம் பிடிக்கும் என்கிறார்கள். புஞ்சை பயிர் செய்கிறவர்கள் நிலக்கடலையும் வரகும் சேர்த்து மாற்றி மாற்றிப்பயிர் செய்கிறார்கள். வரகு சாகுபடிக்கு எருப்போடுகிறதில்லை. ஆனல் நிலக்கடலை சாகுபடி செய்யும்போது குளத்து வண்டல் எரு வடிக்கிறார்கள். மோரிசு நிலக்கடலை பயிர் செய்யத்துவக்குமுன், புஞ்சையிற் பாதிதரிசாகக் கிடந்து வந்தது. அது மாடுகள் மேய்வதற்குப் புல்லாந்தரையாக உபயோகப்பட்டு வந்தது. புஞ்சை மாசூல் ஒரு கணக்காக வில்லை. பரீக்ஷை செய்து பார்த்ததில் புஞ்சையில் ஒரு வருஷம் ஒரு பாகத்தில் ஏகருக்கு 35கலம் நிலக்கடலை கண்டது. மற்றொரு பாகத்தில் அதே தரமான நிலம் 25-கலத்துக்கு மேல் காணவில்லை. வரகு நல்ல வருஷங்களில் 20-கலம் விளையும் காலம் கெட்டிருந்தால் சிலசமயம் 12-கலம் தான் விளையும். சாமான்யமாகப்பார்த்தால் சராசரி 14 கலம் விளையலாம்.

ஏர்-உழவு:—வன்னியம் பாக்கத்தில் 155 ஏர் உழவு நடக்கிறது. 5 ஏகருக்கு ஒரு ஏர் வைத்தால் போது மென்கிறார்கள். இதில் நஞ்சை புஞ்சை இவ்வளவென்று பகுத்துச் சொல்லத் தெரியவில்லை. இந்தக் கணக்குப்படி பார்த்தால் 746 ஏகரா நிலத்துக்கு 155 ஏர்போதும். 5 ஏகராவுக்கு ஒரு ஏர் விகிதம் கணக்குப்பார்த்தால் 775 ஏகரா நிலம் உழுது பயிர்செய்யலாம். ஒரு ஏகருக்கு ஒரு நாட்கூலி 6 அணுவும் 9 பை பெறும்படியான கஞ்சி அல்லது கூழும் என்கிறார்கள். இந்த கிராமத்து உழவுமாடுகள் உறமானவையாக வில்லை. பள்ளிகள் மாடுகள் மற்றக் குடியானவர்கள் மாட்டைவிடத் திறமாயிருக்கின்றன. காரணம்: இரவில் பட்டிமேய விடுவதால் இவர்கள் மாடு கொழுத்திருக்கிறாப் போலிருக்கிறது. 155 ஏருக்கு வேண்டிய உழவு மாடுகளைத் தவிர 130 பசுக்களும், 46 எருமை மாடுகளும் 230 ஆடுகளும் 160 வெள்ளாடுகளும் இருக்கின்றன. ஆடும் வெள்ளாடும் வரவரக் குறைந்து வருகின்றனவாகத் தெரிகிறது.

பண்ணை முறை:—சாதாரணமாகக் குடியானவர்கள் தங்கள் தங்கள் நிலத்தைத் தாங்களே யுழுது சாகுபடிசெய்து வருவார்கள். நிலத்தை குத்தகைக்கு விட்டால் மகசூல் கண்டாலும் காணவிட்டாலும் நிலசுவானுக்கு இவ்வளவு அளக்கிறதென்று ஒப்பந்தம் செய்துகொண்டு அந்தப்படி கொடுப்பார்கள். இந்தக் குத்தகை முதல் தரமான நிலத்துக்கு நஞ்சை ஏகரா ஒன்றுக்கு 20-கலம் என்று சில சமயம் ஏற்படுவதுண்டு. இது மேல்வாரம் (சர்க்கார்வீதம்) போக வென்றும், உள்படவென்றும் இருவிதமுண்டு. இந்த கிராமத்தில் ஏகராவுக்கு 20-கலம் என்றேற்பட்ட குத்தகை மேல்வாரம் (சர்க்கார் பகுதி) உள்படவென்று தெரிகிறது. அதாவது நிலசுவான் அந்த 20-கலத்திலிருந்து சர்க்கார் தீர்வையை

தானே கட்டவேண்டும். இதுதான் குத்தகை சாகுபடி. சாகுபடிச் செலவுபோக, மிருந்தது தான் குத்தகைக் காரனுக்குலாபம். குடிவாரம் என்கிற இன்னொரு பண்ணை முறையு மிருக்கிறது. இது கிணற்றுப் பாய்ச்சல் நிலத்தில் விசேஷமாய் வழங்கி வருகிறது. ஒரு குடியானவன் தானுக சாகுபடிச் செலவை யெல்லாம் போட்டுக்கொள்ள முடியா விட்டால், இன்னும் இரண்டு பேர்களைக் கூட்டிக் கொண்டு மூன்று பேர்களும் சேர்ந்து கூட்டுப் பண்ணை வைக்கிறுர்கள். இதில் மாசூல் மொத்தத்தில் மூன்றிலொரு பாகம் நிலத்தை உபயோகப் படுத்தியதற்காக நிலசுவானுக்குக் கொடுத்து விட வேண்டியது. பாக்கி மூன்றிலிரண்டு பங்கு மாசூல் விளைவில் ஸர்க்கார் தீர்வை போக மிகுந்ததை மூன்று பேர்களும் பகிர்ந் தெடுத்துக் கொள்வார்கள். இந்த முறைப்படி நிலசுவான் தானே கூட்டுப் பண்ணை வைத்தால் 40-கலம் விளைந்தால் அவனுக்கு 21 கலம் வரும். குத்தகைக்கு விட்டாலோ 20 கலம் தான் கிடைக்கும். அதுவும் நிலம் முதல்தரமானதா யிருக்கவேண்டும். குத்தகைக்காரனும் முதல் வருஷம் நெல்லளந்தது போல் மறு வருஷம் குத்தகை அளக்கமாட்டான். அடுத்த வருஷம் நிலம் இளைத்துப் போகு மாதலால் குத்தகையும் குறைந்து போகும். இதில் ஸர்க்கார் தீர்வையும் கட்ட வேண்டும். கூட்டுப் பண்ணை வைத்தாலோ நிலசுவான் தானே பண்ணையாளுமாயிருப்பதினல் மற்றஇருவர்களும் நிலம் பஞ்சையாகப் போகும்படி விடாமற் பார்த்துக்கொள்ளலாம். குத்தகை சாகுபடியில் நிலசுவானுக்குப் பண்ணையில் சிறிதும் சம்பந்தமில்லையாதலால், குத்தகைக்காரன் குழிவெட்டல், எரு முதலான செய்நேர்த்திகள் கிரமப்படிச் செய்யாமல் நிலம் பஞ்சையாகப் போகவிடலாம்.

புஞ்சை சாகுபடி:—புஞ்சை நிலங்களை சாதாரணமாய் குத்தகைக்கு விடுவதில்லை. 6-அல்லது 7 ஏகரா புஞ்சை மிராசுள்ளவர்கள் எல்லாவற்றையும் அவர்களே சாகுபடி செய்துவந்தாலும் அறுவடை காலத்திலும் நிலக்கடலை முதலிய மாசூலை சுமாராக இவ்வளவு காணுமென்று மதிப்பிட்டு ஒப்பந்தத்தின்மேல் இதரர்களைக் கண்ட்ராக்டர்களாக நியமித்து மாசூலைச் சேகரம் செய்து லாப நஷ்டங்களுக் குட்பட்டவர்களாய் அவர்களே விற்றுமுதல் கிரயம் முதலானது செய்துகொள்ள விடுவதுண்டு. குறித்த தவணையில் கட்ட வேண்டிய பணத் தொகையோடு நிலத்துக் குடையவன் நிலக்கடலைச் செடியையும் எடுத்துக் கொள்கிறுன். நிலக்கடலையைமட்டும் கண்ட்ராக்டர் மாசூல் செய்து சொந்தமாக உபயோகித்துக்கொள்கிறுன். நிலக்கடலைச் செடியை அப்படியே நிலத்தில் மடியவிட்டுழுதால் நல்ல உறமாகும். ஆனுல் மாடுகளுக்குத் தீனியில்லை யாதலால் அப்படிச் செய்வது சாத்தியமாயில்லை. இப்படி மாசூலைக் குத்தகைக்கு விடுவதில் போட்டி யிருந்தால் தொகையதிகம் கூடிவரும். சராசரி ஏகரா ஒன்றுக்கு $67\frac{1}{2}$ ரூபாய் மிதானமான தொகை. ஆனுல் ஒரு சமயம் ஒருவன் 4 ஏகரா நிலத்தை 265 ரூபாய்க்கும் மற்றொரு சமயம் வேறொருவன் $1\frac{1}{2}$ ஏகராவுக்குக் குறைந்த நிலத்தை 112 ரூபாய்க்கும் மாசூல் அறுவடைக் குத்தகைக்கு விட்டிருக்கிறுன். இந்த பேதமெல்லாம் காலவிசேஷத்தையும் நில விசேஷத்தையும் மட்டும் பொறுத்ததாயின்றி போட்டியையும் சரக்குமுறுக்கையும் ஒரு சமயம் 'செட்டியார் முறுக்கையும்' கூடப் பொறுத்ததாயிருக்கிறது. இதை யெல்லாம் விரித்துரைக்கில் பெருகுமென்று சுட்டிக் காட்டிவிட்டோம். இனி கிராமக் குடிகளின் குடித்தனச் செட்டைப்பற்றி கவனிப்போம். இத்தலைப்பின் கீழ் முதலில் குடியானவன் குடும்பத்தையும், பிறகு நூல்வாணியன் அல்லது கைக்களவன் குடும்பத்தையும் பிறகு கிராமவேலைக்காரர்கள் குடித்தனப்பாங்கையும் குறிப்பிட்டுச் சொல்கிறுர்.

(தொடரும்.)

## SHORT STORY.

### வைத்தியநாதன்.

கே. எஸ். வீரராகவ சர்மா.

"வீட்டிற்கு ஜேஷ்டனாகப் பிறந்தது போதும் போதும். எது செய்ய வேண்டுமானாலும் நான் தான் அதைச்செய்ய வேண்டும்" என்று வைத்தியநாதன் கடுத்த குரலுடன் உரக்கச் சொன்னான். அவனருகில் ஆறு அல்லது ஏழு வயதுள்ள பெண் ஒன்று நின்று கொண்டிருந்தது. அவர்களிருவரையும் உற்று நோக்கினால் உடன் பிறந்தவர்களென்பது நன்றாய் வெளிப்படும். அந்தப்பெண் கையில் ஒரு காகிதத்துண்டை வைத்துக்கொண்டிருந்தது. தன் தமயனை நோக்கி "அண்ணா இந்த கடிதாசியில் ஒரு குதிரை எழுதிக்கொடேன்" என்று கமலா கூறினாள்.

"எதாவது செய்யும் போதெல்லாம் இந்த மாதிரி தொந்தரவுதானா? இந்தா உன் குதிரை" என்று சொல்லி காகிதத்தில் இரண்டு மூன்று கோடிழுத்து வைத்தியநாதன் கமலாவினிடம் கொடுத்தான்.

"குதிரைக்கு ஜீனி போட்டுக் கொடேன்" என்று கடிதாசித்துண்டை வைத்யநாதனிடம் கமலா நீட்டினாள்.

"அதெல்லாம் சுந்தரத்தைப்போட்டுத்தரச் சொல். என்னால் இப்பொழுது முடியாது" என்று சொல்லி விட்டு கமலாவை வைத்தியநாதன் வெளியே அனுப்பிவிட்டான்.

கமலா சுந்தரத்தினிடம் போய் "சின்னண்ணா! 'அண்ணாவை ஜீனிபோடச்சொன்னால் கோபித்துக் கொள்ளுகிறார். நீ போட்டுக் கொடுக்கிறாயா!" என்று வேண்டினாள்.

சுந்தரன் "அதற்கு என்ன போட்டுத் தருகிறேன்; அண்ணாவுக்குக் கோபமில்லாத போது நல்லகதை ஒன்று சொல்லச் சொன்னால் நன்றாய்ச் சொல்லுவார்" என்று சொன்னான்.

கமலாவை வெளியே அனுப்பி விட்டதும் வைத்தியநாதன் தன் சிநேகிதருக்கு எழுதவேண்டிய கடிதங்களை எழுதிவிட்டு சீதாராமனைப் பள்ளிக்கூடத்தில் போய்ப்பார்க்க சித்தஞ்செய்தான். இனி வைத்யநாதன் யார்? என்பதைக் கவனிப்போம்.

விளச்சேரியில் இருக்கும் அருணாசல அய்யரின் ஜேஷ்டகுமாரன் வைத்தியநாதன். அவன் இதுவரையிலும் சென்னையில் படித்துக் கொண்டிருந்தான். அருணாசல அய்யருக்கு ஒரு வருஷமாக, மனழக்காலத்தில் பிடித்த குளிரினால் ஜுரம் வந்து, அவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அப்படியிருந்தும் அவர் ஆறுமாதம் தமது காரியங்களை சரிவர நடத்தி வந்தார். ஆனால் இப்பொழுது முன்னிருந்ததைவிட அதிகமாக பலஹீனமுண்டான படியால், வெளியே போய், வயல், அறுப்புமுதலியவைகளை நேரில் பார்க்க முடியவில்லை. அதனால், ஜேஷ்ட புத்திரனாகிய வைத்தியநாதன் தமக்குப் பதிலாக எல்லாவற்றையும் பார்த்துக்கொள்வானென்று நினைத்து பட்டணத்திலிருந்து அவனை ஊருக்கு வரவழைத்தார். வைத்தியநாதன் கெட்டிக்காரனும் நல்லவனுமான போதிலும், இத்தனை நாளாய் சுகமாக பட்டணத்திலிருந்த படியால் தன்னூரில் இருக்க அவனுக்குப் பிடிக்கவில்லை.

சற்று வாய் படபடப்பும் கோபமுமுடையவனாதலால் அவன் சகோதரர் அவன் கோபமாயிருக்கும்போது பேச அஞ்சுவார்கள். வைத்தியநாதனுக்கு சீதாராமன், சுந்தரம், ராஜா என்று மூன்று சகோதரரும், கமலா என்று ஒரு சகோதரியும் இருந்தனர். சீதாராமனுக்கு வயது பதினான்கு. தன் தமையனோடு பட்டணத்தில் வாசித்து விட்டு இப்பொழுது விடுமுறையானதால் ஊருக்கு வந்திருந்தான். லீவு வீணாகக் கழியக்கூடாதென்று அருணாசலய்யர் கருதி, அந்த ஊரிலிருந்த பள்ளிக்கூடத்து உபாத்தியாயரை சீதாராமனுக்கும் சுந்தரத்திற்கும் பாடஞ்சொல்லித்தர அமர்த்தியிருந்தார். அவர் தினந்தோறும் வந்து, இர

ண்டு மணி நேரம் பாடம் சொல்லி விட்டுப் போவார்.

வெளியே போக வைத்தியநாதன் புறப்படும் போது வீட்டு வேலைக்காரி சுப்பு கதவைத்திறந்தாள். அவளுடன் 3 வயதுள்ள அழகியபிள்ளை வந்திருந்தது. சுப்பு, வைத்தியநாதனைப்பார்த்து "அப்பா! ராஜாவை கொஞ்ச நேரம் வைத்துக்கொண்டிருக்கிறாயா? அம்மா கூப்பிடுகிறார்கள். போய் என்னவென்று கேட்டு வருகிறேன்" என்றாள்.

"சுந்தரத்தினிடம் விட்டு விட்டுப் போகக் கூடாதா? எப்பொழுதாவது வெளியே போக வேண்டு மென்று நினைத்தால் அதற்கு எத்தனை தடங்கல்! சீக்கிரம் போய் வா" என்று கடுத்த முகத்துடன் வைத்தியநாதன் பதிலுரைத்தான்.

சுப்பு, இவனுடைய குரலையும் முகத்தையும் கவனித்து நோக்கினாள். குழந்தையை வைத்துக்கொண்டிருக்க இஷ்டமில்லை யென்பதை தெளிவாய் அறிந்தாள்.

"வைத்தியநாதா! குழந்தையை நீ வைத்துக்கொள்ள வேண்டாம். உன் காரியத்தைப் பார்த்துக் கொண்டால் போதும்" என்று சொல்லி விட்டு குழந்தையோடு அவ்விடத்தை விட்டுப் போனாள்.

"என்ன, வயது ஆகஆக புத்திகுறைந்து கோபமும் வாய்பதட்டமும் அதிகமாகிறது போல் இருக்கிறதே" என்று சுப்பு போனதும் அவளைப்பற்றி வைத்தியநாதன் நினைத்தான். பிறகு சற்றுயோசித்த பிறகு "ஐயோ! நமக்கு புத்தி தெரிந்தது முதல் அன்புடன் வளர்த்த சுப்புவினிடம் ஏன் இப்படி துடுக்காகப் பேசினோம்" என்று விசனப்பட்டான்.

வைத்தியநாதன் தம்பியைப் பார்க்கத் தோப்பிற்குள் சென்றான். கொஞ்ச தூரத்தில் சீதாராமன் வருவதைப்பார்த்து "சீதாராமா! வீட்டிற்குப்போய் என்ன செய்யப்போகிறாய்? நாமிருவரும் சற்று நேரம் உலாவி விட்டுப் போகலாம்" என்றான்.

"அப்படியே ஆகட்டும்" என்று சீதாராமன் சொல்ல, இருவரும் பேசிக்கொண்டே சென்றனர்.

"லீவானதும் நீ பட்டணம் போக வேண்டாமா? இல்லாவிட்டால் என்னைப்போலவே இங்கேயே இருக்கப்போகிறாயா?" என்று வைத்தியநாதன் சீதாராமனைக் கேட்டான்.

"அப்பா அனுப்பினால் அங்கு தான் வாசிக்கலாமென்றிருக்கிறேன்" என்று கொஞ்சம் விசனத்துடன் சீதாராமன் பதிலளித்தான்.

"அப்பா அனுப்பினால் அங்கு தானென்கிறாயே அனுப்ப மாட்டேனென்றாரா என்ன?"

"மாட்டேனென்று சொல்லவில்லை. இப்பொழுது எனக்கு மாதம் சம்பளம் ரூ 5 அல்லவா? அது கொடுப்பது கஷ்டம் என்றுசொன்னார்."

"நான் அந்த 5 ரூபா கொடுக்க முடியுமானால் எனக்கு எவ்வளவு சந்தோஷ மிருக்கும் தெரியுமா?"

"அண்ணா! அதைப்பற்றி தாங்கள் விசனப் படவேண்டாம். எதற்கும் ஸ்வாமியிருக்கிறார்." என்று தைரியமான குரலோடு சீதாராமன் சொன்னான்.

இவர்கள் இப்படி பேசிக்கொண்டே உலாவி விட்டு வீடுபோய்ச்சேர்ந்தார்கள். வீட்டு வாசலில் சுப்பு இவர்களைக்கண்டு, "அண்ணா உங்களுக்காகச் சாப்பிடக்காத்திருக்கிறார்" என்றாள்.

"இதோ வந்து விட்டேனென்று சொல்" என்று சொல்லிவிட்டு, வைத்தியநாதன் தன் அறைக்குச்சென்றான். உடுப்புக்களைக் கழட்டிவிட்டு எல்லாரும் போஜனத்திற்கு உட்கார்ந்தார்கள்: அருணாசல அய்யர் வைத்தியநாதனை நோக்கி, "பையா! சீக்கிரம் வரக்கூடாதா? இத்தனை நாழிகை உனக்காகக் காத்திருந்தேனே" என்றார்.

"வெளியேஉலாவப்போயிருந்தேன்" என்று வைத்தியநாதன் பதில் கூறினான்.

"இனிமேலாவது வீட்டுக் காரியங்களைக் கொஞ்சம் அக்கறையாய்ச்செய்; எனக்கு வயு

தாய் விட்டது, நான் உன்னைப்போல இருந்த போது அகத்துக்காரியமெல்லாம் நான் தான் செய்வேன்.''

"ஆமாம் அப்பா! அது உங்கள் அகம்; அதனால் தான் நீங்கள் அவ்வளவு கஷ்டப்பட்டீர்கள்.''

"வைத்தியநாதா! அப்படிச் சொல்லாதே; இது என் வீடானாலும் உன் வீடுதானே! இப்படி நீ சொல்வா யென்று நான் இது வரைக்கும் நினைக்கவில்லை'' என்று விசனத்துடன் அருணாசல அய்யர் கூறினார்.

இப்படி இவர் மனவருத்தத்தோடு கூறினதும் வைத்தியநாதனுக்கு தன் மீது கோபம் வந்தது "ஐயோ நமது வாய்ப்பதட்டத்தால் அவருக்கு வருத்தம் தந்தோமே'' யென்று தன்னையே கடிந்து கொண்டான்.

மேற்கூறிய சம்பவங்கள் நடந்து சில நாட்களாயின. வைத்தியநாதன் தன் வாய்ப்பதட்டத்தால் முன்பின் யோசியாமலே ஏதாவது சொல்லி விடுவதும் பிறகு தன்னையே கடிந்து கொள்வதுமாக இருந்தான். அருணாசல அய்யரும் என்றைக்கு நமது பையன் குணம் மாறுமென்று எண்ணிக்கொண்டிருந்தார். ஒரு நாள் தபால்காரன் அருணாசல அய்யருக்கு கடிதம் கொண்டு வந்து கொடுத்தான். அது அருணாசல அய்யர் தம்பி பத்மநாப அய்யரிடமிருந்து வந்தது. அதில் பத்மநாப அய்யர் அங்கு வருவதாக எழுதியிருந்தார்.

சிற்றப்பா வருகிறாரென்று அருணாசல அய்யருடைய பிள்ளைகள் அறிந்ததும், அவர்கள் எல்லாரும்சந்தோஷமடைந்தார்கள். பத்மநாப அய்யர் தாம் வரும்போது குழந்தைகளுக்கு பிஸ்கோத் முதலிய தின்பண்டங்கள் கொண்டு வருவார். தவிர, குழந்தைகளோடு தாமும் ஒரு குழந்தையைப்போல சேர்ந்து விளையாடுவார். வைத்தியநாதனுக்கு மாத்திரம் தன் சிறிய த்கப்பனரிடம் கொஞ்சம் பயமுண்டு. இவன் படபடவென்று பேசுவது அவருக்குக் கொஞ்சம்கூட பிடிக்காது. அதனால் வைத்தியநாதனை அடிக்கடி கடிந்து கொள்வார். சிறு பிள்ளைகளிடம் யாராவது சண்டை செய்தாலும் சரி, கோபித்துக்கொண்டாலும் சரி, அவர்களை நன்றாய் கோபித்துக் கொள்வார்.

பத்மநாப அய்யருக்கு சஞ்ஜீவி என்பவன் ஜேஷ்ட குமாரன். அவனும் வைத்யநாதனும் ஒரே வயதுடையவர்கள். சிறு வயதில் பெரியம்மை போட்டி அவன் கால் ஊனமாய் விட்டபடியால் நன்றாய் நடக்க முடியாது. தினந்தோறும் சாயங்காலத்தில் கொஞ்சதூரம் மெள்ள உலாவுவான். மற்ற வேளைகளிலெல்லாம் படுத்த படுக்கை தான். ராஜா, கமலா முதலியவர்கள்சஞ்ஜீவியைப் பற்றிபேசும்போதெல்லாம், "நம்ம சஞ்ஜீவி அண்ணா எப்பொழுதும் படுத்துக்கொண்டிருக்க வேண்டியதாமே எவ்வளவு கஷ்டமாயிருக்கும்!'' என்று சொல்வார்கள்.

பத்மநாப அய்யர் வந்து சேர்ந்தார். கமலா, ராஜா முதலியவர்கள் அவரை வெல்லத்தை ஈக்கள் மொய்த்துக் கொள்வது போல் சூழ்ந்து கொண்டனர். சிற்றப்பா வந்த கொண்டாட்டத்தில் குழந்தைகள் பள்ளிக்கூடம்போக ஒழியாமல் ரஜா பெற்றுக்கொண்டார்கள். குழந்தைகளை அழைத்துக்கொண்டு அன்று சாயந்திரம் எங்கு போகிறதென்று யோசித்தார்கள். சிறுவர்கள் அருகிலுள்ள ஏரியைப்பார்த்து விட்டு வரலாமென்றார்கள். சீதாராமன் மலைக்குப்போய் வரலாமென்றான். வைத்திய நாதன் மாத்திரம் ஒன்றும் சொல்ல வில்லை.

"வைத்தி! நீ ஏரிக்குவரவில்லையா?'' என்று அவன் சிற்றப்பா கேட்டார்.

"சிற்றப்பா! நான் தோப்பிற்குப் போகிறேன். வேறே எங்கும் போகப்போகிறதில்லை'' என்று வைத்தி சொன்னான்.

"அண்ணா வந்தால் வரட்டும், இல்லாவிட்டால் போகட்டும். நாம் போகலாம்'' என்று குழந்தைகள் ஒரு குரலாய்க்கூற யாவரும் ஏரிக்குச்சென்றார்கள்.

அவர்கள் போனதும் வைத்தியநாதன் எழுந்து "அப்பா இன்றைக்கு இராமாயணம்

வாசிக்கச் சொன்னாரே இப்பொழுது வாசிக்கலாமா? என்று யோசித்துக்கொண்டே தன் தகப்பனாரிடம் சென்றான். அவர் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். "இப்பொழுது அவர் தூங்குகிறார். உடம்பு எப்படி யிருக்கிறதோ? நாம் ஏன் இப்பொழுது எழுப்ப வேண்டும்" என்று மனதில் நினைத்து தோப்பிற்குள் சென்றான். தோப்பிலிருந்து திரும்பினதும் நம் நண்பன் தகப்பனாரிடம் சென்றான். அங்கு சீதாராமனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் உபாத்தியாயர் தகப்பனாருடன் உட்கார்ந்து இராமாயணம் வாசிப்பதைக் கண்டான். அவனைக் கண்டதும் அருணாசல அய்யர் "பையா! வெளியே எங்கே போயிருந்தாய்? இராமாயணம் இன்றைக்கு வாசிக்க வேண்டுமென்று சொன்னேனே! ஞாபகமில்லையா?" என்றார்.

"இல்லை அப்பா! தோப்பிற்குப் போவதற்கு முன் தங்களிடம் வந்திருந்தேன். தாங்கள் தூங்கிக்கொண்டிருக்கவே புறப்பட்டுப்போய் விட்டேன்" என்றான் வைத்தி.

"என்னை எழுப்பக்கூடாதா? உன்னால் இப்பொழுது எவ்வளவு கஷ்டம் தெரியுமா?"

"என்ன கஷ்டம் அப்பா?"

"சீதாராமன் உபாத்தியாயர் இன்றைய தினம் பள்ளிக்கூடத்துத் துரையைப்பார்க்க வேண்டுமென்றிருந்தார். நீ இல்லாததினால் அவரை இராமாயணம் வாசிக்கச் சொன்னேன். அதனால் துரையை இன்று பார்க்க முடியாது. சரி, போய் ஏதாவது காரியமிருந்தால் செய்" என்று சொன்னார்.

வைத்தியநாதன் பின்வருமாறு யோசிக்கலானான்: "ஐயோ! நாம் எவ்வளவுதான் நல்லவனாய் இருக்கப் பிரயத்தினப்பட்டாலும் அது முடியவில்லையே! வாயை எவ்வளவு அடக்கினாலும் முடியவில்லை. ஏதாவது நல்லது செய்ய ஆரம்பித்தாலும் அது நம் எண்ணத்திற்கு மாறாக முடிகிறது" என்று எண்ணிக் கொண்டே சென்றான்.

மறுநாள் சாயந்திரம் பத்மநாப அய்யர் வைத்திய நாதனை நோக்கி "வெளியே போய் உலாவி விட்டுவரலாம், வருகிறாயா?" என்று கேட்டார்.

"சுந்தரம்! கமலா முதலியவர்கள் கூட வரவில்லையா?" என்று கேட்டான் வைத்தி.

இன்றைக்குக் கடைக்குப் போகிறார்கள். சீதாராமன் அவர்களோடு போகிறான். அதனால் அவர்கள் வரவில்லை" என்றார்.

"சரி, அப்படியானால், வருகிறேன். சிற்றப்பா" என்று சொல்லிவிட்டு அவரோடு சென்றான்.

மாந்தோப்பின் வழியாய் அவர்கள் வந்தனர்.

சாயங்கால மானபடியால் எங்கும் தம் கூட்டிற்குச் செல்லும் பட்சிகள் கலகல வென்று ஒலித்தன. அஸ்தமிக்கும் சூரியனது கிரணங்கள் மஞ்சள் நிறமாய்ப் பிரகாசித்தன. அப்பொழுது பத்மநாப அய்யர், வைத்தியநாதனை நோக்கி அவன் கருத்தறியச் சிலநேரம் சம்பாஷணை செய்தபின், கடைசியில் என்னுடன் ஊருக்கு வருகிறாயா போய்வரலாமென்றார். அதற்கு வைத்தியநாதன் சற்று யோஜித்து அப்பா உத்தரவு கொடுத்தால் வருவதாக ஒப்புக்கொண்டான். இந்த சம்பாஷணை நடந்து. சிலநாட்கள் சென்றன,

பத்மநாபய்யர் ஊருக்குப் போவதாகக் குறிப்பிட்ட நாளும் வந்து சேர்ந்தது. வைத்திய நாதனும் அவருடன் போக நிச்சயித்து வேண்டியவைகளை எடுத்துக் கொண்டான். அருணாசலய்யர் உடம்பை ஜாக்ரதையாய்ப் பார்த்துக் கொள்ளும்படி வைத்தியநாதனை வற்புறுத்தினார். சுந்தரம், கமலா, முதலியவர்கள் சஞ்ஜீவி அண்ணாவுக்குத் தங்கள் நமஸ்காரங்களைச் சொல்லும்படி வேண்டினார்கள். போய்ச் சேர்ந்ததும் கடிதம் எழுதும்படி யாவரும் சொன்னார்கள். ஊருக்குப் புறப்பட்டுச் சாயங்காலம், பத்மநாப அய்யர் இருக்கும் ஊரை இருவரும் அடைந்தார்கள்.

பத்மநாப அய்யரிட வீடு கொஞ்சம் பெரிய

தாயிருந்தது. வாசல் திண்ணைகள் பெரிதாயிருந்தன. வீட்டிற்குள் குழந்தைகள் விளையாடும் சப்தம் கேட்பதற்கு இனிமையாயிருந்தது. இவர்கள் வரும் வண்டியின் சப்தத்தைக் கேட்டதும் "அப்பா" என்று கூவிக்கொண்டு வாசலில் ஓடிவந்தார்கள். வண்டியிலிருந்து பத்ம நாப அய்யரும் வைத்திய நாதனும் இறங்கினதும் குழந்தைகள் தகப்பனாரைச் சுற்றிக்கொண்டு "அப்பா, நீ இன்னிக்கு இங்கே வரேன்னு அண்ணா சொன்னா, அதாலே வண்டி வரும் போதெல்லாம் வாசல்லே வந்து பார்த்துக் கொண்டிருந்தோம்" என்று சொன்னார்கள்.

பத்மநாப அய்யர் அவர்களைத் தழுவியெடுத்து "சரி! அண்ணா எல்லாரும் சௌக்கியந்தானே?" என்று கேட்டு விட்டு "இதோ வைத்தி அண்ணா வந்திருக்கார். உள்ளே அழைத்துக்கொண்டு போய் விளையாடிக் கொண்டிருங்கள். நான் வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு வண்டியிலிருந்து சாமான்களை இறக்கிக்கொண்டிருந்தார்.

பத்மநாபய்யருக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்குழந்தைகளு மிருந்தன. அவர்களில் மூத்தவன் தான் சஞ்ஜீவி. அவனுக்குச் சிறியவன் ராமமூர்த்தி என்பவன். அவனுக்கு வயது பத்து. அடுத்தவள் சீதாலக்ஷ்மி என்னும் பெண். அவள் வயது எட்டு. மற்ற இருவரும் குழந்தைகள். குழந்தைகளும் மற்றவர்களும் சிரித்த முகத்துடன் வைத்தியநாதனுடன் கொஞ்சிக்கொண்டே உள்ளே அழைத்து வந்தன. சிறு பிள்ளைகளுடன் விளையாடும் வழக்கமில்லாத வைத்தியநாதன் முதலில் கொஞ்சம் வெட்கங்கொண்டபோதிலும் சிறிது நேரத்திற்குள், அவன் வெட்கம் நீங்கி, அவர்களோடு சேர்ந்து விளையாடினான்.

வைத்திய நாதன், உள்ளே போகும் பொழுது சஞ்ஜீவியைப்பற்றி யோசித்தான். "ஒரு கட்டிலின் மீது படுத்து, தலையணைகளால் தன் உடம்பு தாங்கப்பெற்று, நோயால் எப்பொழுதும் அழுத கண்ணும் மூக்கு சியந்திமாய், பேசுபவர்களோடு, எரிந்து விழுந்து கொண்டிருப்பான்" என்று எண்ணினான்.

ஆனால் இவன் பார்த்தது, இவன் எண்ணினதற்கு முற்றிலும் மாறாக இருந்தது. உள்ளே கம்பீரமான குரலில் தன் சிற்றப்பனாரோடு ஒருவன் பேசுவது காதில் விழுந்தது (பத்மநாப அய்யர் உள்ளே வந்து விட்டார்). இவன் கூடத்திற்குள் சென்றதும் பத்ம நாப அய்யர் "வைத்தியநாத! கூட்டிலகப்பட்டுக் கிடக்கும் கிளியைப்பார்த்தாயா? இவன் தான் சஞ்ஜீவி!" என்று சொல்லிவிட்டு, "நீங்கள் இருவரும் பேசிக்கொண்டிருங்கள். நான் சற்று வெளியே போய்விட்டு வருகிறேன்" என்று சொல்லி வெளியே போனார்.

"இவனெண்ணத்திற்கு முற்றிலும் மாறாக இருந்தது" என்று முன்னே சொன்னோமல்லவா! அது என்னவென்றால் கூடத்தில் சுத்தமான ஒரு கட்டிலில் வெண்மையான வஸ்திரங்களால் மூடப்பட்ட மெத்தை போடப்பட்டிருந்தது. அதன்மேல் சாந்தமும் அன்பும் அடங்கிய பார்வையுடைய யௌவன பருவமுள்ள ஒருவன் சாய்ந்திருந்தான்—அவன் தான் சஞ்ஜீவி.

"வா, அப்பா வைத்தியநாதா, ஊரில் குழந்தைகள், பெரியப்பா முதலியவர்கள் க்ஷேமந் தானே?" என்று ஆவலுடன் சஞ்ஜீவி வினவினான்.

"எல்லாரும் சௌக்யமே!" என்று பதிலளித்தான் வைத்தியநாதன்.

சஞ்ஜீவி—"என்னைப்பார்த்தால் நாள் முழுவதும் ஒரே இடத்தில் படுத்துக்கொண்டிருக்கிறான். மிகவும் கஷ்டமாயிருக்கும் என்று நீ நினைப்பாய்."

வைத்தி—"ஆம்! நானும் அப்படித்தான் எண்ணிக்கொண்டிருந்தேன்."

சஞ்ஜீவி,—"முதலில் எனக்கும் அப்படித் தான் தோன்றிற்று. ஆனால் இப்பொழுது முன்போல் அவ்வளவு கஷ்டமாயில்லை."

இவர்கள் இப்படி பேசிக்கொண்டிருக்கும் பொழுது சீதாலக்ஷ்மி அங்கே வந்தாள். சஞ்ஜீவி அவளைப்பார்த்து விட்டு,

"வைத்தியநாதா! சாதாரணமாய் மனிதர்களுக்கு இரண்டு கைகள் தானுண்டு, எனக்கோ பிரஹ்மா, விஷ்ணு முதலியவர்களைப் போல சதுர்ப்புஜங்கள் (நாலுகைகள்) இருக்கின்றன."

"சஞ்ஜீவி! நீ சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லையே."

"உனக்கு இருக்கிறது போல் எனக்கும் ஸ்வாமி இரண்டு கைகள் தான் கொடுத்திருக்கிறார். மற்ற இரண்டு 'அடிஷனல் (Additional)' கைகள் சீதாலக்ஷ்மி தான். என் இரண்டு கைகளால் செய்ய முடியாததை யெல்லாம் சீதாலக்ஷ்மியே செய்கிறாள்" என்று சொல்லிவிட்டு, "லக்ஷ்மி, அண்ணாவினுடைய அறையைக் காட்டிவிட்டுவா." என்று சொன்னான்.

சீதாலக்ஷ்மியும் குதித்துக்கொண்டே வைத்தியநாதனுடன் அறையண்டை போய் "அண்ணா, இந்த உள்ளில் உங்கள் பெட்டியை வேலைக்காரன் கொண்டு வந்து வைத்து விடுவான், நீங்கள் சொக்காயைக் கழட்டிவிட்டு ஸ்நானம் செய்ய வாருங்கள் என்று சொல்லி விட்டுப்போய் விட்டாள்.

வைத்திய நாதன் ஸ்நானஞ் செய்து, போஜனம் செய்து விட்ட பின்பு, கூடத்திற்கு வந்து சேர்ந்தான். அப்பொழுது பத்மநாபய்யரும் சஞ்ஜீவியும் பேசிக் கொண்டிருந்தார்கள், பத்மநாப அய்யர் வைத்தியநாதனைப்பார்த்து, "நான் ஊரிலில்லாத பொழுது சஞ்ஜீவி எனக்குப் பதிலாக என் காரியங்களைப் பார்க்கிறான். இப்பொழுது நான் வந்து விட்டபடியால் "சார்ஜ்" என்னிடம் ஒப்பிக்கிறான்" என்றார்.

"தாங்கள் வெளியேபோய்க் காரியங்கள் செய்யலாம்: சஞ்ஜீவியால் எப்படி வேலை செய்ய முடியும்?" என்றான் வைத்திய நாதன்.

"இஷ்டமிருந்தால் கஷ்டமில்லை, யாரையாவது ஆள்களைக் கூப்பிட வேண்டுமென்றால் ராமமூர்த்தி கூப்பிட்டு வருவான். சஞ்ஜீவி ஆள்களுக்குச் செய்யவேண்டிய காரியங்களைச் சொல்வான். காரியம் முடிந்து விடும்" என்றார் பத்மநாப அய்யர்.

இதுவரையிலும் ஒன்றும் பேசாமலிருந்த சஞ்ஜீவி, வைத்தியநாதனைப்பார்த்து, "லக்ஷ்மி, உன்னறையைக் காட்டினாளா?" என்று வினவினான்.

"காட்டினாள்"———என்றான் வைத்தியநாதன்.

"அண்ணா தமக்கு 4 கைகள் என்றல்லவா காலமே சொன்னார். அவருக்கு நாலு கால்கள் கூடவாச்சே. இரண்டு கால் சும்மா இருக்கும். மற்ற இரண்டு கால்களும் அங்குமிங்கும் ஓடி வேலைசெய்து கொண்டிருக்கும்." என்று ராமமூர்த்தி வைத்தியநாதனைப் பார்த்துச் சொல்லி விட்டு சஞ்சீவியைப் பார்த்து "அண்ணா நான் சொல்வது மெய்தானே!" என்றான்.

"ஆளுக்குச் சம்பளம் தருவாளே, உனக்கு அண்ணா என்ன சம்பளம் தரார்?" என்று சீதாலக்ஷ்மி கேட்டாள்.

"எனக்குச் சம்பளம் கொடுக்கிறதும்கொடுக்கர்ததும் உனக்குத் தெரியு மாக்கும்!" என்று ரரமமூர்த்தி சொன்னான்.

அன்றையதினம் இவ்விதமாகவே பொழுது கழிந்தது.

மறு நாள் காலையிலெழுந்து ஸந்தியாவந்தனம் முடிந்தது. பிறகு சிறுவர்களெல்லாரும் பழையமுது சாப்பிட்டுவிட்டு கூடத்தில் சஞ்ஜீவியினிடம் வந்து உட்கார்ந்தார்கள். சஞ்ஜீவி அவர்களுக்குத் தமிழும் இங்கிலீஷும் கற்றுக் கொடுத்தான். பழையமுது சாப்பிட்ட பிறகு வெளியே போயிருந்த வைத்திய நாதன் அப்பொழுது கூடத்திற்கு வந்து சேர்ந்தான். சஞ்ஜீவி அவர்களுக்குப் பாடஞ் சொல்லிக்கொடுப்பதைப் பார்த்து "சஞ்ஜீவி! இந்த ஊரில் பள்ளிக்கூட மில்லையா? நீ இவர்களுக்குப்பாடஞ் சொல்லிக் கொடுக்கிறாயே?" என்று வினவினான்.

(இன்னும் வரும்.)

## NOTES AND REVIEWS.

வீணை.

அல்லது அருளானந்தரின் அதிசயி அனுபவங்கள் என்னும் புஸ்தகத்தை அதன் ஆசிரியர் தி. சா. வேணுநாத மிடமிருந்து வந்தனத்துடன் வரப்பெற்றோம், ரயில் பிரயாணம்செய்யும்பொழுது மூளையில் அடிபட்டவர் பத்து வருஷங்களுக்குப் பிறகு அதே இடத்தில் அடிபட விபத்து நடந்த ராத்திரியின் சம்பவங்கள் மாத்திரம் ஞாபகத்திற்கு வந்து பத்து வருஷங்களாய் நடந்தவைகளை மறந்துபோவது மிகவும் ஆச்சரியமாய் சொல்லப்பட்டிருக்கிறது. இந்நூலின் ஆசிரியர் இச்சுய சரிதையை படிப்பவர்களுக்கு அச்சரியத்தையும் ஆநந்தத்தையும் உண்டாகும்படி எழுதியிருப்பதோடு மல்லாமல் மூளையானது அடிபட்டால், அந்த அடியின் வேகம் தணிந்து ஓய்ந்த பிறகு தான் அடிபடும்பொழுது செய்த வேலையை திரும்ப செய்கிறது என்பதை நன்றாக விளக்கிக்காட்டியிருக்கிறார்.

காமினியா ஆயில்.

சென்னை பூக்கடை சமீபம் 29-சைனா பஜார் ரோட், மதராஸ், மேதா பருஷோத்த மூல்ஜியினிடமிருந்து வரப்பெற்றோம். இத்தைலம் மூலிகைகளால் தயாராக்கப்பட்டது. நாம் இதை உபயோகித்துப்பார்த்ததில் அவர்கள் இதற்கு சொன்ன குணங்களெல்லாம் இருக்கின்றன. மயிரை பளபளப்பாகவும், மிருதுவாகவும், மூளையை குளிர்ச்சியாகவும் வாசனையாகவும் செய்கிறது. இதன் வாசனையோ மிக இனிமையாயும் நீடித்து மிருக்கிறது. இதை ஒரு தடவை உபயோகித்துப்பார்த்தால் திருப்தியடைவார்கள் என்பதற்கு சந்தேகமில்லை. நமக்கு அனுப்பி வைத்த காமினியா காலெண்டரை வந்தனத்துடன் வரப்பெற்றோம்.

வைத்திய கம்பெனி.

இவர்களிடமிருந்து காட்லாக்கும் மாதிரிகளும் வரப்பெற்றோம். இவர்கள் ஜிண்டானுக்கு மாத்திரமன்றி, அலெம்பிக் ரஸாயன சாலை, டாங்கர்ஸ் பாலாமிருதம் முதலிய இன்னும் மற்ற பேர்போன சுதேச மருந்துகளுக்கும் ஏஜண்டுகள். இதோடு இவர்கள் சொந்தமாக பித்தளை மெழுகு வர்த்திஸ்டாண்டுகள் செய்கிறார்கள். இவைகள் இதர ஸ்டாண்டுகளை விட குறைந்த விலைக்கு கொடுக்கப்படுவது மல்லாமல் மற்றவைகளைவிட மிகவும் உறுதியாயும் அழகாயும் நீடித்து மிருக்கின்றன. இப்பொழுது இருக்கும் எல்லா சுதேச கம்பெனிகளிலும் இவர்கள் பல வருஷங்களாய் "ஊக்கமது கைவிடேல்" என்னும் பழமொழியைக் கொண்டு உழைக்கின்றார்கள். இக்கம்பெனியை நமது நேயர்கள் ஆதரிப்பார்களென்றும், இதர கம்பெனிகளும் இவர்களைப் போலவே உழைப்பார்களென்றும் நம்புகிறோம். ஏனென்றால் இந்தியா முன்னுக்குவரவேண்டுமென்றால் நமது கைத்தொழிலினால்தான் வரவேண்டும்.

---

## THE VIVEKACHINTAMANI.

The January issue of the *Vivekachintamani* is an educational number devoted to the question of "The Education of Young India" in which Lord Hardinge is exhibiting such keen interest. It begins with an article on "Education: the True Wealth of Nations" and is followed by a dozen other articles of lively interest on kindred subjects. A copy of the "*Vivekachintamani* Children's Record," has now been sent to all the Secondary Schools for boys and girlsand Higher and Lower Secondary Training Schools and the heads of these schools and teachers in these institutions are invited to lend their helpful co-operation to this healthy *Children's Movement*.—*The Madras Standard*.

THE "VIVEKACHINTAMANI".—The January issue of the *Vivekachintamani* is an educational number devoted to the question of "the Education of Young India" in which Lord Hardinge is exhibiting such keen interest. It begins with an article on "Education: the True Wealth of Nations" and is followed by a dozen other articles on kindred subjects such as 'the literates and masses, the crown of humiliation—a story after Sir Rabindranath Tagore's "Kabir and the Woman," "Necessity knows no law," explaining the true meaning of a much misunderstood aphorism, "Easy talks on Health-culture" etc., A copy of the "Vivekachintamani Children's Record" has now been sent to all the Secondary Schools for boys and girls and Higher and Lower Training Schools and the heads of these schools and teachers in these institutions.—*The Hindu*.